வாரீர்
புதுமை
தவழ்ந்திட.




பார்த்தறியாப் புதுமை. பரவசக் கிளுகிளுப்பு. லிரில். அலையெறியும் தளதள பச்சை. அதன் நயமோ குளுகுளு எலுமிச்சை...புதுக் குமரியாய் உங்களைப் பூரித்தெழ வைக்கும்.

**லிரில்**

புத்துணர்வு சோப் **மனம்குளிரும் எலுமிச்சைப் புத்துணர்ச்சி வெள்ளம்.**

லின்டாஸ்-LR.28-303 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

## பதவி - பூர்வ புண்ணியம்

கொல்லன் ஒருவன் ஓர் இரும்பைக் காய்ச்சினான். சிறு கலயத்திலிருந்த தண்ணீரில் அதை நனைத்தான். 'சர்'ரென்று சத்தம் கேட்டது. தண்ணீர் வற்றிப் போய் விட்டது. உடனே கொல்லனுக்கு ஒரு யோசனை தோன்றிற்று. ''ஊர் ஜனங்கள் நம்மை விரோதிக்கிறார்கள். ஒரு பெரிய இரும்பைக் காய்ச்சிக் குடிதண்ணீர்க் கிணற்றில் போட்டு விட்டால் கிணறு வற்றி ஊர் மக்கள் சாகட்டும்'' என்று கருதினான். காய்ச்சியும் போட்டான்; இரும்பு தொலைந்து போனதுதான் மிச்சம்.

முயல் வேட்டையில் ஜயித்தவன் புலி வேட்டையில் இறங்கக் கூடாது. கேரம் போர்டில் வெற்றி பெற்றவன், கால் பந்தாட்டத்திலும் வெற்றி பெற முடியும் என்று கருதக் கூடாது.

கொலைச் சிந்து எழுதிப் பணம் சேர்த்தவன் ராமாயணம் எழுத முயற்சி செய்யக் கூடாது.

# முதல் பக்கம்...




அவரவர்க்கு வாய்த்த இடம் அவன் போட்ட பிச்சை. ''பதவி பூர்வ புண்ணியமாகும்.'' பூனைக்கு மணிமகுடம் கிடைத்தாலும் அது பூர்வ புண்ணியமே. 'ஐயோ! இவனா பதவிக்கு வந்து விட்டான்?' என்று அங்கலாய்த்துப் பயனில்லை. அவனது பூர்வ புண்ணியம் அவனை உச்சத்தில் வைக்கிறது.

அப்பாவிகளான பெற்றோர்களுக்கு அற்புதமான குழந்தைகள் கிடைக்கின்றன. அற்புதமான பெற்றோருக்கு அயோக்கியனான குழந்தை பிறக்கிறான். சில வீடுகளுக்கு மகாலட்சுமியே மருமகளாக வருகிறாள்; சில வீடுகளுக்கு பிரம்ம ராட்சசியே வருகிறாள். சில குழந்தைகள் தாய் தகப்பனைத் தோளில் வைத்துக் கொண்டாடுகின்றன. சில, சோற்றுக்கு அலைய விடுகின்றன.

பூர்வ புண்ணியக் கணக்கு அந்தந்த அளவிலேயே நிறைவேற்றப்படுகிறது.

உச்சத்து நட்சத்திரங்கள் உருண்டு விழுகின்றன. விழுந்த பின்னாலேதான் விளைவை உணர்கின்றன. ஆராய்ச்சியும், பகுத்தறிவும் எங்கே போயின?

நடந்து போ. காலில் செருப்புப் போட்டுக் கொள். செருப்பையும் தாண்டி ஆணி குத்தக் கூடும். செருப்பில்லாத காலில் எதுவும் குத்தாமலும் இருக்கக் கூடும்.

மனித முயற்சியின் பலவீனத்துக்குள்ளே பலமாக அடங்கியிருப்பதே பூர்வ புண்ணியம்.

அதிதிக்குச் சோறு போட்டுச் சாப்பிடும் பழக்கம் இப்போது அடியோடு மறைந்து விட்டது. அந்த அடிப்படைத் தர்மமே மறைந்ததால் எத்தனையோ அலங்கோலம்!

'மரம் வைத்தவன் தண்ணீர் ஊற்றுவான்' என்பார்கள். 'ஆட்டுக்கு வாலை அளந்துதான் வைத்தான்' என்பார்கள். 'குதிரைக்கு ஏன் கொம்பு கொடுக்கவில்லை' என்பார்கள்.

அரிசியைக் கவ்வுகிற எறும்பின் வாய் வெல்லக் கட்டியைக் கவ்வி இழுக்க முடியவில்லை. மரக் கிளையை யானை முறிப்பது போல், மனிதன் கைகள் முறிக்க முடிவதில்லை. எல்லாவற்றையும் ஒழுங்குபடுத்திப்பார்த்தால், பூர்வ புண்ணியம் என்பதன் அர்த்தம் தெரியும்.

தேர்தல் நடக்கிறது; யார் ஜெயிப்பார்களோ, தெரியாது. யாராவது நீங்கள் விரும்பாத ஒருவர் ஜெயித்து விட்டால் வோட்டுப் போட்டவர்களை முட்டாள்களாக்காதீர்கள். வோட்டு வாங்கியவனின் பூர்வ புண்ணியத்தைக் கணக்கில் எடுங்கள்.

உங்களுக்குக் கிடைக்காத வாய்ப்பு, உங்கள் குழந்தைகளுக்குக் கிடைக்க வேண்டுமென்றால் புண்ணியம் செய்யுங்கள். இருப்பதை இல்லாதவனுக்குக் கொடுங்கள். இல்லாதவனைக் கேலி செய்யாதீர்கள்.

சொத்து சேர்த்து உயில் எழுதுவது போல் புண்ணியத்தை உயில் எழுதி வையுங்கள்.

உங்களிடம் வாங்கிக் கொள்கிறவன் மனிதனல்ல; இறைவனது இடது கை வாங்குகிறது; அது வலது கையால் திருப்பித் தரப்படுகிறது.

பசித்தவனுக்குப் பழைய சோறு போட்டால் உங்கள் ஆயுள் முழுதும் பழைய சோறு கிடைக்கும். பஞ்சாமிர்தம் கொடுத்தால் பஞ்சாமிர்தம் கிடைக்கும்.

பத்துப் பேர்களின் தாகத்தைத் தீர்த்து விட்டு, பாறையைத் தோண்டிப் பாருங்கள்; தண்ணீர் கிடைக்கும். வாழுகின்ற காலத்தில் உங்களுக்குப் பதவி கிடைக்கிறதோ இல்லையோ, வைகுந்த பதவியோ, சிவலோக பதவியோ நிச்சயம் கிடைக்கும்.



# கல்கி

1977 ஜூன் 12

பிங்கள

வைகாசி 30

ராஜாஜி சிந்தனை

## ஏன் கவனிக்க வேண்டும்?

''எல்லாம் சரிதான். ஆனால் புத்திக்கு அகோசரமான ஒரு பொருளைப் பற்றி மனிதன் ஏன் கவனிக்க வேண்டும்? அறிய முடியாத விஷயத்தைப் பற்றிச் சிந்திப்பதிலோ ஆராய்வதிலோ என்ன பயன்?'' என்ற கேள்வி பிறக்கிறது. இதற்குச் சமாதானம் என்னவென்றால், பௌதிக சாஸ்திர ஆராய்ச்சிக்கு எட்டாததினாலேயே, இருக்கும் ஒரு பொருள் இல்லாமல் போகாது. நாம் தொட்டு, கண்டு, முகர்ந்து, கேட்டு, ஆராய்ந்து பார்த்த விஷயங்களுக்கு மேல், முதல் காரணமாயும் அனைத்துக்கும் ஆதாரமாயும் ஒன்று உளது என்பது நிச்சயம். அதைத் தொட முடியாது; அதன் உருவத்தை அறிய முடியாது; அதன் குணங்கள் புத்திக்கு எட்டாதவை; ஆனபோதிலும் அது எங்கும் எவ்விஷயத்திலும் கலந்து நிற்கிறது. சகல பதார்த்தங்களும், சகல சக்திகளும், மனிதனுடைய சொரூபம் உள்பட அனைத்தும் இந்த அறிய முடியாத பொருளால் கவரப்பட்டிருப்பது உண்மை. இத்தகைய பெரிய ஓர் உண்மையைக் கவனிக்காமல் எப்படி இருக்க முடியும்? ஆகையால் பரம்பொருளைக் கவனியாமல் விட்டு விடலாம் என்பது முடியாது. இருட்டறையில் இன்னது இருக்கிறது என்று அறிய முடியாதுதான்; ஆனால் அதில் ஒரு முக்கியமான சாமான் இருப்பது உறுதியாயிருக்குமாயின், அந்த இருட்டறையைக் கவனியாமல் விட முடியுமா?

—கண்ணன் காட்டிய வழி



### கல்கி சந்தா

| | ஒரு வருடம் ரூ.பை | ஆறு மாதம் ரூ.பை |
|---|---|---|
| இந்தியா | 38.00 | 19.00 |
| இலங்கை (இலங்கை நாணயப்படி) | 38.00 | 19.00 |
| வெளிநாடுகள் | 90.00 | 45.00 |

''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# இரட்டை விசாரணை!

கர்நாடக முதல்வர் திரு தேவராஜ் அர்ஸ் தாம் ரொம்பவும் சாமர்த்திய மாகச் செயல்படுவதாக நினைத்துக் கொண்டார். மத்திய அரசு, தம்மைப் பற்றியும் தமது சக மந்திரிகள் பற்றியும் உள்ள குற்றச்சாட்டுக்களை விசாரணை செய்ய உத்தரவிடு முன்னர் தாமே முந்திக்கொண்டார். இப்படிச் செய்வதன் மூலம் மத்திய அரசின் விசாரணையைத் தவிர்த்துவிடலாம் என எண்ணினார். ஆனால் அவர் தற்போது தமது கணக்குப் பிசகிப் போனதை உணர்ந்திருக்கிறார். மத்திய அரசும் ஓய்வு பெற்ற சுப்ரீம் கோர்ட் நீதிபதி ஏ. என். கிரோவர் தலைமையில் இன்னொரு விசாரணைக் குழுவை நியமித்துள்ளது. இவர் மாநில அரசு நியமித்த நீதி விசாரணைக் கமிஷனுக்கு உட்படுத்தப்படாத இதர குற்றச் சாட்டுக்களையும் விசாரிப்பார்.

இதைவிட அர்ஸும் அவரது சகாக்களும் மத்திய அரசு விசாரணைக் குழு அமைக்குமா என்று எதிர்பார்த்தே காத்திருந்திருக்கலாம். அப்படிச் செய்திருந்தால் எந்த அளவு விசாரணைக்கு உட்பட வேண்டி யிருந்திருக்குமோ, அதைவிடப் பலமடங்கு அதிகமாகவே தற்போது அவர்கள் விசாரணைக்கு உள்ளாக வேண்டி யிருந்திருக்காது.

மாநில விஷயத்தில் தலையிட்டு மத்திய அரசு விசாரணைக் கமிஷன் அமைத்தது சரியல்ல, அது அரசியல் சாசனத்துக்கு முரணானது என்று கூறிக் கர்நாடக முதலமைச்சர் சுப்ரீம் கோர்ட்டில் வழக்குத் தொடுத்திருக்கிறார். இந்த விஷயம் சந்தேகத்துக்கு இடமின்றி முடிவாவது நல்லதே.

எனினும் இன்றுள்ள நிலைமை அவ்வளவாகத் திருப்திகரமாக இல்லை. மத்திய அரசு பற்றியோ அல்லது மாநில அரசு பற்றியோ இது போன்ற குற்றச் சாட்டுக்கள் எல்லாவற்றையும் விசாரிக்கவென்றே ஓர் அமைப்பு உருவாக வேண்டும். அவ்வமைப்பு மத்திய அல்லது மாநில அரசுகளுக்கு உட்படாமல் சுதந்திரமாக இயங்க வேண்டும். இந்த நோக்கில்தான் லோக்பால் அமைத்து அதற்கு மத்திய அல்லது மாநில அரசுகள் மீது விசாரணை நடத்த அதிகாரம் அளிப்பது அவசரமும் அவசியமும் ஆகிறது. பிரதமர் திரு மொரார்ஜி தேசாய் இத்தகைய அமைப்பு விரைவில் உருவாகும் என்று உறுதி அளித்துள்ளார். —க. சந்தானம்


கல்கி மலர் 36 இதழ் 46



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற—எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்


# மேலட்டையில் மூவர்

தமிழ்நாடு சட்டமன்றத் தேர்தலில் எந்தக் கட்சி வெற்றி பெறுமோ நமக்குத் தெரியாது. ஆனால் எந்தக் கட்சி வெற்றிபெற வேண்டும்; எந்தக் கட்சி வெற்றி பெற்றால் பாரதத்துக்கும் தமிழ்நாட்டுக்கும் நன்மை என்பது நமக்குச் சந்தேகத்துக்கு இடமின்றி நிச்சயமாகத் தெரியும்.

அந்தக் கட்சி ஜனதா கட்சிதான்.

மற்றபடி தேர்தல் களத்தில் குதித்துள்ள கட்சிகள் எதுவுமே சிறிதளவு சிந்தனை சக்தியுடைய எவரையுமே கவராது.

தி. மு. க. தலைவர்கள் இன்னும் சர்க்காரியா விசாரணையிலிருந்தே விடுபடவில்லை. எந்த முகத்தை வைத்துக் கொண்டு அவர்கள் வெட்கமின்றி வோட்டுக் கேட்க வருகிறார்கள் என்பது புரியவில்லை. தப்பித் தவறி அக்கட்சி வெற்றிபெற்றுவிடுமானால் தமிழகத்தில் லஞ்ச ஊழல் மிகுந்த தான்தோன்றித்தனமான ஆட்சிக்கு மறுபடியும் பட்டா வழங்கியதாகிவிடும். தமிழக மக்கள் இத்தகைய பெருந் தவற்றினைச் செய்துவிட மாட்டார்கள் என்று நம்புகிறோம்.

அடுத்து தி. மு. க.விலிருந்து பிரிந்து வந்த அ.இ.அ.தி.மு.க.வும் தேர்தலில் போட்டியிடுகிறது. அதன் தலைவர் திரு எம். ஜி. ஆர். மக்களிடையே பெரும் செல்வாக்குப் பெற்றுள்ள திரைப்பட நடிகர் என்ற அளவில் நமது பாராட்டைப் பெறுகிறார். நல்லிதயம் கொண்டவர், தயாள சிந்தை உடையவர் என்பதால் நமது மதிப்பையும் மரியாதையையும் கவர்கிறார். ஒரு நடிகர் என்ற காரணம் காட்டி அவர் அரசியலில் புகுவதை ஆட்சேபிப்பது அநாகரிகம். அரசியலையே தொழிலாகக் கொண்டவர்கள்தாம் அரசியலில் நீடிக்க வேண்டும் என்றால் தேசம் உருப்படாது. பல்வேறு தொழில்களிலும் ஈடுபட்டிருக்கையிலேயே அரசியலிலும் பலர் ஆர்வம் காட்டுவதே ஜனநாயகம் வளர உகந்தது.

நமது பாராட்டையும் மதிப்பையும் மரியாதையையும் பெற்றுள்ள எம். ஜி. ஆர்.

அவர்களைத் தலைவராகக் கொண்டுள்ள அ.இ.அ.தி.மு.க. வலுவான கொள்கைகளையும் உடையதாக இருப்பின் அக்கட்சியை நாம் மனமுவந்து ஆதரிக்க முடியும். ஆனால் நாம் காண்பது என்ன? ''காபிடலிஸம், சோஷலிஸம், கம்யூனிஸம் ஆகிய மூன்றும் இணைந்ததுதான் அண்ணாயிஸம்; அதுதான் எமது கொள்கை'' என்ற அரசியல் ஞான சூன்யமான ஒரு விளக்கம் விளைவித்த அதிர்ச்சியிலிருந்தே நாம் இன்னும் மீளவில்லை.

நெருக்கடி நிலைப் பிரகடனம் செய்து, சொல்லி முடியாத கொடுமைகளுடன் கூடிய சர்வாதிகார ஆட்சி நடத்திய ஸ்ரீமதி இந்திரா காந்தியையும் அவரது காங்கிரஸ் கட்சியையும் நேற்றுவரை வானளாவப் புகழ்ந்து பாராட்டி வந்தனர் அ. இ. அ. தி. மு. க. தலைவர்கள். நாடாளுமன்றத் தேர்தலில் இந்திரா காங்கிரஸுடன் கூட்டுச் சேர்ந்து ஜாலராப் போட்டனர். இதனைக் குறுகிய அரசியல் நோக்கென்றால், இன்று மத்தியில் அமைந்துள்ள ஜனதா அரசுக்கு ஆதரவளிப்பதாக அதே தலைவர்கள் கூறுவது வடிகட்டின சுயநல நோக்கமாகவே தெரிகிறது.

நேற்றுவரை தி. மு. க.விலிருந்த எந்தப் பெரும் புள்ளிகளை லஞ்ச ஊழல்களின் வடிவம் என்று குற்றம்சாட்டி மத்திய அரசிடம் புகார் மனுக்களையும் சமர்ப்பித்ததோ அதே தலைவர்களுக்கு இன்று தன் கட்சியிலேயே இடமளித்து வேட்பாளராகவும் ஆக்கியுள்ளது; அல்லது சுயேச்சையாக நிற்கும் அவர்களுக்குத் தன் முழு ஆதரவை அளிக்கிறது. இதன் மூலம், ''ஒரே குட்டையில் ஊறிய மட்டைகள்'' என்ற காமராஜரின் வர்ணனையை மீண்டும் மெய்ப்பிக்கிறது அ.இ.அ.தி.மு.க. இத்தகைய ஒரு கட்சிக்குத் தமிழக மக்கள் ஆதரவு தரலாமா?

காங்கிரஸ் தேர்தல் களத்தில் குதிக்கிறது என்று கூறுவதை விடத் தன்னைத் தானே ஆழக் குழி தோண்டிப் புதைத்துக் கொண்டிருக்கிறது என்று சொல்லலாம். இதற்கு அத்தாட்சியாக அதன் தேர்தல் அறிக்கை ஒன்றே போதும். நெருக்கடி நிலைப் பிரகடனம், அதைத் தொடர்ந்து நடந்த அட்டூழியம், அதன் பிறகு நாடாளுமன்றத் தேர்தலில் கிடைத்த படுதோல்வி இவை எதிலிருந்தும் காங்கிரஸ் பாடம் கற்கவில்லை. மாறாக, தான் செய்ததை யெல்லாம் தேர்தல் அறிக்கையில் நியாயப்படுத்த முனைந்திருக்கிறது. இந்த அடாவடித்தனமான போக்கு, காங்கிரஸின் தலைமையும் மாறவில்லை, தலைவர்களின் மனமும் மாறவில்லை என்பதைத் தெள்ளத் தெளிய எடுத்துக் காட்டுகிறது. இனி, இத்தகைய சர்வாதிகாரத்துக்கு மக்கள் சற்றும் இடம் தரமாட்டார்கள்.

எஞ்சி நிற்பது ஜனதா கட்சிதான். 'மற்றவை பிரயோஜனமில்லை; மிச்சமிருப்பது இதுதான்' என்பதற்காக மக்கள் ஜனதாவுக்கு ஆதரவு தரவேண்டுவதில்லை. அதன் கொள்கைகளை அலசிப் பார்த்தே ஆதரவு தரலாம். அது பெற்றுள்ள வெற்றிகளைக் கண்டே வோட்டுப் போடலாம்.

முதலில் கண்ட மாபெரும் வெற்றி, தனித் தனியாக இருந்த கட்சிகள் ஒன்றாக இணைந்தது. தேர்தல் கால கூட்டாளியாக மட்டுமின்றி ஒரே கட்சியாக இணைந்து மக்களுக்குக் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றியது. அதன் மூலம் பாரத ஜனநாயகம் அசைக்க முடியாதபடி வேரூன்றித் தழைக்க உதவியது.

இரண்டாவது வியத்தகு வெற்றி, ஒரு சர்வாதிகார ஆட்சியைப் புரட்சி ஏதுமின்றி, மக்களுடைய வாக்குப் பலத்தாலேயே வென்றது. இதனை உலகம் கண்டறியாத அற்புதமாகவே சரித்திரம் போற்றும்.

மூன்றாவது மகத்தான வெற்றி அதன் தேர்தல் அறிக்கை. 'அனைவருக்கும் வேலை வாய்ப்பு, அதன் மூலம் தேசத்தில் சுபிட்சம்' என்ற கொள்கை பொருளாதாரத்தில் ஆரம்பப் பாடம்தான். ஆனால் முப்பதாண்டு காலமாகக் காங்கிரஸ் ஆட்சி இந்த அனா ஆவன்னாவைக்கூடக் கற்கவில்லை. அதற்கு ஒரு ஜனதா கட்சி அமைந்து ஆட்சிக்கு வர வேண்டியிருந்தது. கிராமப்புறங்களில் விவசாயத் தொழில் வளப் பெருக்கம், தொழில் கல்விக்கு ஊக்கம், மக்களின் சுதந்திரங்களையும் அடிப்படை உரிமைகளையும் யாரும் இனி எக்காலத்திலும் பறித்துவிட முடியாதபடி உறுதிப்படுத்துதல் ஆகியன ஜனதா கட்சியின் வேறு சில உயரிய கொள்கைகள். இவை காந்திய அடிப்படையில் அமைந்த மெய்யான சோஷலிஸம் தழைக்க உதவுபவை. இன்னும் கட்சி மாறுதலைத் தவிர்க்கச் சட்டம், ஆட்சியில் உள்ளோர் மீது சுமத்தப்படும் குற்றச்சாட்டுக்களை விசாரிக்கத் தனியானதொரு நீதிக் குழு, லஞ்ச ஊழலற்ற நேர்மையான ஆட்சி போன்றவை ஜனதா கட்சி மக்களுக்கு அளித்துள்ள வாக்குறுதிகள்.

தேர்தல் கால வாக்குறுதிகளைக் காற்றில் பறக்க விடாமல் இவற்றை நிறைவேற்ற ஜனதா முழுமூச்சுடன் பாடுபடும் என்பது அது பதவிக்கு வந்துள்ள ஒருசில நாட்களிலேயே நிரூபணம் ஆகியிருக்கிறது. அது மேலும் மும்முரமாகச் செயலாற்றி நாட்டை உன்னத நிலைக்கு உயர்த்த நல்வாய்ப்புத் தர வேண்டிய கடமை மக்களுக்கு உண்டு. மத்தியில் ஆட்சியில் அமர்ந்தால் மட்டும் போதாது. மாநிலங்களிலும் அதற்கு பலம் சேர்ந்தால்தான் திட்டங்களைச் செயலூக்கத்துடன் தங்கு தடை இன்றி அதனால் நிறைவேற்றி வைக்க முடியும். எனவே பல்வேறு மாநிலங்களிலும் ஜனதா அரசு அமைந்து மத்தியிலுள்ள ஆட்சிக்கு ஒத்துழைப்பை நல்குவது இன்றியமையாதது.

'தமிழக மக்கள் அறிவாளிகள், தங்கள் வோட்டுக்களைத் திறனறிந்து யோசித்து அளிப்பவர்கள்' என்ற நற்பெயரை நாம் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். இங்கு அமைய வேண்டிய நல்லாட்சிக்குக் கட்டியம் கூறுவதே போல் இவ்விதழ் மேலட்டையினை மூன்று ஜனதா பிரமுகர்கள் அலங்கரிக்கிறார்கள்.

அவர்கள் மூவரும் தமிழ்நாடு ஜனதா கட்சியின் பிரசாரக் குழுவினர். அவர்களில் நடுநாயகமாக விளங்கும் திரு பா. ராமச்சந்திரன் தலைவர் காமராஜரின் வலக்கரமாகத் திகழ்ந்தவர். 'காமராஜர் தமது கட்சியை இந்திரா காங்கிரஸுடன் இணைத்துவிடவே நினைத்தார்' என்ற பச்சைப் புளுகில் மக்கள் மயங்கி விடா


ஹா... ஹா... ஐயோ... அம்மாவ்! உயிர் போகுதே!
காங்கிரஸின் வெற்றி வாய்ப்புக்கள் அபிவிருத்தி அடைந்து வருகின்றன!
கட்சிக்குள் அடிதடி
சஞ்சய் ஊழல்கள்

மீண்டும் கட்சி மாறும் வரை உண்ணாவிரதம்
என் பிறப்புரிமை பறி போகிறது!
கட்சி மாறல் தடுப்பு மசோதா
ஆய்வுக் குழு

என்ன பெரிய எம்.ஜி.ஆர்! நம்ம சஞ்சய் அவரை ஆதரிக்கிறதாச் சொன்னு போதும்! மண்ணைக் கவ்விடுவார்!

மல் காத்ததுடன் ஸ்தாபன காங்கிரஸையும் கடைசிவரை கட்டிக் காத்த தீரர்.

ஜனதா கட்சி தோன்றிய பிறகு நாடாளுமன்றத் தேர்தலில் அ. இ. அ. தி. மு. க. வேட்பாளரைக் கணிசமான வோட்டு வித்தியாசத்தில் வென்று மத்திய அமைச்சரவையில் சக்தி அமைச்சராக அமர்ந்தவர். சக்தி அமைச்சர், கிராமந்தோறும் விளக்கெரியவும் நாடெங்கும் தொழில் வளம் பெருகவும் சக்தி அளிக்க வேண்டியவர். அதற்கு முதற்படியாக மக்களின் ஒன்றுபட்ட ஆதரவு அவருக்குப் புதுச் சக்தி அளிப்பதாக விளங்க வேண்டும்.

அடுத்து இடதுபுறம் காணப்படுகிறவர், நெருக்கடி நிலைப் பிரகடனம் எப்படித் திடுதிப்பென்று தோன்றியதோ அதேபோல், அதன் காரணமாகவே திடீர் புகழ் பெற்றவர். கண்ணபிரான்போல் நாடாளு மன்றத்தில் மின்னலாகத் தோன்றியும் மாயமாக மறைந்தும் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியவர். நெருக்கடி நிலைப் பிரகடனத்தின்போது 'ஜனநாயகம் இங்கு செத்து விடவில்லை' என்ற பொய்ப் பிரசாரத்தை அயல் நாட்டு மக்களும் தலைவர்களும் நம்பிவிடாதிருக்க நிரம்பப் பிரயாசை எடுத்துக் கொண்டவர். தமிழ்க் கடவுளும் வெற்றித் தெய்வமுமான முருகப் பெருமானின் திருநாமத்தையே தம் பெயராகக்கொண்ட சுப்பிரமணிய சுவாமி. தமிழகத்தில் அவரது முயற்சி வெற்றி பெற ஆறு படை வீடுடையோனைப் பிரார்த்திப்போம்.

மூன்றாவது நபர், திரு செழியன். தி.மு.க. விலிருந்து பிரிந்து வந்து ஜனதாவில் சேர்ந்தவர் என்றாலும் தி. மு. க. தலைவர்கள் பலரிடம் ஒட்டிக் கொண்டிருக்கும் அழுக்குகளைத் தம்மிடம் அண்ட விடாதவர். ஜனதாவில் இன்று முழு மனத்துடன் சேர்ந்துள்ள அவர், தி.மு.க.வில் நீடித்தபோதும் அண்மைக் காலமாக மிகவும் மன வருத்தத்துடன் தான் இருந்தார். தி.மு.க. தலைமையின் எதேச்சாதிகாரப் போக்கும் அதன் கொள்கைகளில் ஏற்பட்ட திடீர் மாற்றங்களும் அவர் மனத்தைப் புண்படுத்தி வந்தன. பாரதத்தின் ஒருமைப்பாட்டிலும் இங்கு மெய்யான ஜனநாயகம் தழைப்பதிலும் அக்கறை கொண்டுள்ள எவரும் செய்யக் கூடியதையே அவரும் செய்தார். ஜனதாவில் சேர்ந்தார்.

திரு செழியனுக்கு ராஜாஜியிடம் பெரு மதிப்பு உண்டு. தலைநகரில் ராஜாஜி சிலை அமைக்கும் குழுவில் அவர் ஓர் அங்கத்தினர். ராஜாஜி குறித்துக் கல்கியில் ஒன்றரை ஆண்டுகளுக்கு முன் அவர் எழுதினார்:

> ''ஓர் அரசியல்வாதி அடுத்து வரும் தேர்தலைப் பற்றிக் கவலைப்படுகிறான்; ஓர் அரசியல் ஞானி வருங்காலச் சந்ததிகளைப் பற்றிக் கவலைப்படுகிறான்'' என்று கூறுவார்கள். தன்னை அடுத்துள்ள நிலைமையையும் கால அளவையும் முன் வைத்து அரசியல்வாதி செயல்படுகிறான். தன்னை முன்வைக்காமல் நாட்டையும் மக்களினத்தையும் முன்வைத்துச் சில அடிப்படை நெறிமுறைகளுக்காக அரசியல் ஞானி சிந்திக்கிறான்; பாடுபடுகிறான்.
>
> பலரும் சிந்திக்கிறார்கள். ஆனால் சிந்தனையால் எல்லோருக்கும் தெளிவு பிறப்பதில்லை. முதலில் அவர்களுக்குத் தெளிவு கிடைத்தாலும் மற்றவர்களுக்கும் அந்தத் தெளிவை உண்டாக்கும் திறமை இருப்பதில்லை. தனக்குத் தெளிவு இருக்கிறது; பிறருக்கும் தெளிவைத் தந்திடும் திறமை இருக்கிறது — இவை இருப்பினும், இருக்கும் சூழ்நிலையைப் பார்த்து, ஏற்படக் கூடிய எதிர்ப்புக்களை நினைத்து, 'நமக்கேன் இந்தத் தொல்லை' என்று அடங்கி விடுவர் சிலர். சிந்தனைத் தெளிவுடன் எழுத்தாற்றல், பேச்சாற்றலுடன் தமது சிந்தனையில் சரியெனப்பட்டதை அச்சமின்றி வெளியிடத் தக்க மன உறுதியும் தேவை.

நாடாளுமன்ற உறுப்பினராக இருந்து அநுபவம் பெற்றுள்ள திரு செழியன், ஜனதா கட்சியின் தமிழ்நாடு பிரசாரக் குழுவில் ஓர் உறுப்பினர்.

தமிழகத்தில் ஜனதா வெற்றி பெறவேண்டும். சட்டமன்றத்தில் பெரும்பான்மை பெற வேண்டும். அதற்கும் அதிகமாக அமோக வெற்றி பெற்றாலும் சரிதான்.

அப்படி ஒருவேளை ஜனதா கட்சி நாம் எதிர்பார்க்கும் அளவுக்கு வெற்றி பெறாது போனாலும் அதை இம்மூவருக்கும் தோல்வியாகவோ அல்லது ஜனதா கட்சிக்குத் தோல்வியாகவோ நாம் கருதத் தேவையில்லை. அடுத்து வரும் வெற்றிக்கு அடிப்படையாகவே எண்ணுவோம்! புகைப்படங்கள்: உத்ரா

# சிறையில் சித்திரவதை!

நெருக்கடி நிலைப் பிரகடனம் வாபஸான பிறகு, இந்தியாவின் பல பாகங்களிலிருந்து, போலீஸாரும் ஜெயில் அதிகாரிகளும் சித்திரவதையை நியாயமான ஓர் ஆயுதமாகக் கருதிப் பயன்படுத்தினார்கள் என்பதாகச் செய்திகள் வந்த வண்ணம் இருக்கின்றன. சிநேகலதா ரெட்டியின் கதை வேதனை தரும் ஒன்று. மலபாரில் நடக்கும் ராஜன் வழக்கில், ராஜன் சித்திரவதைக்குள்ளானது உண்மையே என்று அரசுசார்பிலும், போலீஸ் தரப்பிலும் ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறது. டார்குண்டே அறிக்கை பல உதாரணங்களைத் தருகிறது. எந்தக் காரணத்தை முன்னிட்டும் சித்திரவதை செய்யக் கூடாது என போலீஸ், சிறை அதிகாரிகள், ராணுவத்தினர் ஆகியோரைக் கட்டுப்படுத்தியே ஆக வேண்டும். இந்த விஷயம் மிகவும் முக்கியமானது. ஆகையால் இதற்கென அரசியல் சாசனத்தில் கூட ஒரு மாறுதலைச் செய்யலாம். — க. சந்தானம்



# "ஆறுகால்" ஸ்தோத்திரம்

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராசார்ய சுவாமிகள்

23

முதல் ச்லோகத்தில்:

**தாரய ஸம்ஸார ஸாகரத:** என்று வேண்டிக்கொண்டார் அல்லவா? 'ஸம்ஸாரம்' என்பதை 'பவம்', 'பவம்' என்றும் சொல்வார்கள். 'பவவினை', 'பவஸாகரம்' என்றெல்லாம் பாட்டுக்களில் வரும். பவன் என்று பரமேச்வரனுக்கும் பெயருண்டு. பவன், சர்வன், ருத்ர, பசுபதி, உக்ர, மஹாதேவன், பீமன், ஈசானன் என்ற எட்டுப் பெயர்களும் பரமசிவனுக்கு ரொம்பவும் விசேஷமானவை. பவனின் பத்தினிதான் 'பவானி.' சர்வனின் பத்தினி 'சர்வாணி'. (சர்வன் என்கிறபோது இரண்டு சுழி 'ன்'. சர்வாணி என்கிறபோது மூன்று சுழி 'ணி'. இது ஒரு வியாகரண விதிப்படி ஏற்பட்டது.) ருத்ர பத்தினி ருத்ராணி; இப்படியே ஈசானன்—ஈசானி.

மூகர்கூட (பஞ்ச சதியில்) வேடிக்கையாகச் சொல்வார். "அம்மா, நீ பகவானுக்கு (சிவனுக்கு) ரொம்பவும் பிரேமையை மூட்டிக் கொண்டே இன்னொரு பக்கத்தில் பக்தர்களின் பவத்தை (ஸம்ஸாரத்தை)ப் போக்கடிக்கிறாயே!" என்று சிலேடையாகச் சொல்வார்.

ஸம்ஸார பயம் என்ற துன்பத்தை வெட்டி எறிகிறது பகவானின் பாதம்:

**பவபய கேத ச்சிதே**

இப்படியெல்லாம் இருக்கப்பட்ட பாதத்தை நமஸ்காரம் பண்ணுகிறேன் என்கிறார்: .

**பவபய கேத ச்சிதே வந்தே.**

அடுத்த ச்லோகத்தில் — அதாவது 'ஷட்பதி'யின் மூன்றாவது ச்லோகத்தில் ஒரு பெரிய தத்வத்தைச் சொல்கிறார் ஸ்ரீ ஆசார்யாள்.

**ஸத்யபி பேதாபகமே**
**நாத தவாஹம் ந மாமனஸ்தவம்**
**ஸாமுத்ரோ ஹி தரங்க:**
**க்வசன ஸமுத்ரோ ந தாரங்க:**

'பேத அபகமே' என்பது சேர்ந்து வரும்போது 'பேதாபகமே' என்றாகிறது—'அபகமம்' என்றால் 'போய்விடுவது', 'நீங்குவது' என்று அர்த்தம். கமம், கமனம் என்றால் வருவது, சேர்வது. இதற்கு எதிர்ச்சொல் அபகமம். 'பேத அபகமே' என்றால் 'பேதம் நீங்கிவிட்ட நிலையிலே' என்று அர்த்தம்.

என்ன பேதம்? இப்போது பரமாத்மா என்று ஒன்று இருக்கிறது. அதற்கு வேறாக ஜீவாத்மா என்று இன்னொன்று இருக்கிறது என்றுதானே நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம்? இப்படி பரமாத்மாவும் ஜீவாத்மாவும் வேறு வேறு என்று, அதாவது அவை பேதமானவை என்று நினைத்துக் கொண்டிருப்பதால்தான் ஸம்ஸார நாடகமே நடக்கிறது. இரண்டும் வேறு இல்லை, ஒன்றுதான், கொஞ்சம்கூட பேதமே இல்லை என்று சொல்வதுதான் அத்வைதம். ஆசார்யாள் நிலைநாட்டின ஸித்தாந்தம் அதுதான். 'ஜீவ-ப்ரம்ம அபேத யோகம்' என்றே அதைச் சொல்வார்கள்.

இந்த பேதம் போன நிலையைத்தான் 'பேதாபகமே' என்றார். அதுதான் ஸத்யமான, எக்காலும் மாறாத ஆனந்தமான, மோக்ஷம் எனப்படுகிற நிலை. இதுதான் 'பரம ஸத்தியம் **என்றாலும் கூட**'....

**ஸத்யபி**

'அபி' என்றால் 'என்றாலும் கூட'. இப்படியொரு Clause போட்டுவிட்டால், இதற்கு மாறாக, வித்தியாஸமாக இன்னொரு அபிப்பிராயம் வரப்போகிறது என்று அர்த்தம்.

'அத்வைத ப்ரதிஷ்டாபன ஆசார்ய' என்றே ஸ்தோத்திரம் செய்யப்படுகிற பகவத்பாதாள் அபேத அத்வைதத்துக்குத் துளிக்கூட மாறாக, வித்தியாஸமாக இன்னொன்றைச் சொல்ல மாட்டாரே, இங்கே என்ன 'அபி' போடுகிறார் என்று பார்த்தால்:

இங்கே அவர் பக்தராகப் பேசுகிறார். ஞானியாக அத்வைதத்தைச் சொன்னார், ஞான மார்க்கத்தில் போகக் கூடியவர்களுக்கு எப்படிச் சொல்ல வேண்டுமோ அப்படித் தமது பாஷ்யங்களிலும், மற்ற ஞான க்ரந்தங்களிலும் சொன்னார். தீர்மானமாக, 'ஜீவாத்மா பரமாத்மா என்று இரண்டில்லை. பிரம்மம் ஒன்றுதான் ஸத்யம். ஜீவனும் அந்த பிரம்மம்தான். இந்த லோகமெல்லாம் வெறும் மாயைதான்' என்று திரும்பத் திரும்பச் சொன்னார்.

ஆனால் இப்படி அவர் **சொன்னார்** என்பதாலேயே, சொல்கிறவர், அதைக் கேட்க வேண்டியவர்கள் என்றெல்லாம் ஏதோ பேதமிருக்கிற மாதிரி இருக்கிறது. எல்லாம் பிரம்மம், லோகம் மாயை என்றுவிட்டால் யாருக்கு யார், என்னத்தை உபதேசிப்பது?

(தொடரும்)

**[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]**

# வண்டும் மலரும்

ஜோதிர்லதா கிரிஜா

அவர் சகுந்தலாவைக் கண்ணிமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்ததற்கு அவளது அழகுதான் காரணமென்று சொல்வதற்கில்லை. மறுமுறை திரும்பிப் பார்க்க வைக்கிற கவர்ச்சி அவளிடம் நிறைந்திருந்ததே அதற்குக் காரணமாகும். அந்தக் கவர்ச்சி அவளிடம் பொங்கிக்கொண்டிருந்த இளமையின் விளைவு என்றும் ஒரேயடியாகச் சொல்லிவிடுவதற்கில்லை. அவளிடம் இப்போது இளமை துள்ளிக் கொண்டிருந்தது உண்மைதான். என்றாலும், முப்பத்தைந்து — நாற்பது வயசிலும் அவள் கவர்ச்சி நிறைந்தவளாகத்தான் இருப்பாள் என்று தன்னைப் பார்ப்பவர்களை நினைக்க வைக்கிற அறிகுறிகள் அவளிடம் காணப்பட்டன.

தலைமை எழுத்தரின் பார்வை தன் முகத்தின் மீது பரவிக் கொண்டிருந்ததை உணர்ந்து கொண்ட சகுந்தலாவின் முகத்துக்கு இரத்தம் ஏறியது. அவரும் தாம் கண் கொட்டாமல் அப்படித் தரக் குறைவாக அவளை முறைத்திருக்க வேண்டாம் என்று எண்ணிக் கொண்டவர் போன்று சடக்கென்று தம் கழுத்தை ஒடித்துத் திருப்பிக் கொண்டு அவள் தயாரித்துக் கொண்டு வந்து கொடுத்திருந்த அலுவலகக் கடிதத்தின் நமூனாவின் மீது பார்வையை ஓட்டினார். கடிதத்தின் ஓரிரு சொற்களை நீக்கிப் பதிலாக வேறு சொற்களைச் செருகிய பின்னர், ''வெரி குட். நல்ல இங்கிலீஷ்!'' என்று சற்று இரைந்த குரலிலேயே பாராட்டினார். ஃபைலை அவள் புறமாக நகர்த்தி விட்டு நாற்காலியின் முதுகில் நன்றாய்ச் சாய்ந்தார். அவள் ஃபைலை எடுத்துக்கொண்டு கூச்சத்துடன் அப்பால் நகர்ந்தாள். அப்போது அப்பிரிவில் எல்லோருடைய கண்களும் தம்மீது படிவதைத் தலையை உயர்த்தாமலே அவளால் புரிந்துகொள்ள முடிந்தது. அவளது தப்பில்லாத ஆங்கிலத்தைத் தலைமை எழுத்தர் ராமானுஜம் புகழ்ந்துரைத்தது இது முதல் தடவை அல்ல. இதற்கு முன்பு சில தடவைகள்கூட அவளை மற்ற எழுத்தர்கள் முன்னிலையில் அவர் பாராட்டியிருக்கிறார். அதன் விளைவாக அங்கிருந்தோரின் பொறாமைக்கு அவர் அவளை இலக்காக்கி விட்டதையும் அவள் புரிந்து கொண்டிருந்தாள். மற்ற தடவைகளில் விளைந்ததைக் காட்டிலும் மிகுதியான கூச்சம் இப்போது அவளுள் கிளர்ந்தது. அதற்குக் காரணம் தலைமை எழுத்தரின் பார்வை அவ்வளவு நன்றாக இல்லை என்று அவளுக்குத் தோன்றியதுதான்.

அவள் தடுமாற்றத்துடன் இருக்கையில் அமர்ந்தாள். அங்கே சட்டென்று தோன்றிவிட்ட அமைதியின் இறுக்கம் அவளுள் ஓர் அமைதியின்மையைத் தோற்றுவித்து விட்டது. எதிரில் அமர்ந்திருந்த இரண்டு எழுத்தர்கள் — ஆண்கள் — இடமும் வலமுமாகப் பக்கவாட்டில் சரிந்து ஒருவருக்கொருவர் முணுமுணுப்பாகச் சொற் பரிமாற்றம் செய்து கொண்டதையும், அப்போது ஒருவன் கண் சிமிட்டியதையும் மற்றவன் வாயகலப் புன்னகை செய்ததையும் அவள் தற்செயலாகத் தலைநிமிர்ந்து கவனித்துத் தனக்குள் சிறுத்துப் போனாள். தலைமை எழுத்தரைப் பற்றி—அவர் தன்னை அடிக்கடி பாராட்டுவது பற்றிய உட்கிடை குறித்து—அவர்கள் கிண்டலாகவோ அல்லது அசிங்கமாகவோ ஏதோ பேசிக்கொண்டிருந்திருக்க வேண்டும் என்பது பிசகாத உள்ளுணர்வாக அவளுக்குப் புரிந்து போனதே அதற்கு அடிப்படை..

சூழ இருக்கும் நாலு பேரைப் பற்றிய உணர்வு மரத்துப் போய் அசடு வழிவதில் நாற்பது — நாற்பத்தைந்தைக் கடந்தவர்கள் நிகரற்று இருப்பதை அவள் பல தடவைகளில், பல தொடர்பில் அறிந்திருக்கிறாள். அவ்விதிக்கு விலக்காக இருக்கிறவர்களையும் அவள் அறிந்திருந்தாலும், ராமானுஜம் விதிவிலக்காக இல்லை என்பதால் அவரால் தனக்கு ஏதோ தொல்லை விளையப் போகிறது என்ற கலக்கமும் அவள் உள்ளத்தில் உள்ளுணர்வாக எழுந்தது.

ராமானுஜத்தின் மனைவி கடந்த ஈராண்டுகளாகப் பக்கவாத நோயின் விளைவாகப் படுத்த படுக்கையாகக் கிடப்பதையும் சமையல் முதற்கொண்டு குடும்ப வேலைகள் யாவற்றையும் அவரே செய்து கொண்டிருப்பதையும் அவர் அடிக்கடி சலித்துக்கொள்வதிலிருந்து அப்பிரிவில் இருந்த யாவருமே அறிந்திருந்தனர். வீட்டோடு இருக்கக் கூடியவளாய் ஒரு வேலைக்காரியை அமர்த்திக் கொள்ளுமாறு ஒருவர் யோசனை சொன்னபோது, 'அமர்த்திக் கொள்ளலாம்தான். ஆனால் அவள் சாப்பாட்டுச் செலவு, சம்பளம் இரண்டும் சேர்ந்து குறைந்தது நாற்றைம்பதாவது ஆகுமே? அப்புறம் என் ஒரே பிள்ளைக்கு என்ன காசு சேர்க்க முடியும்?' என்று அவர் பதிலிறுத்ததும் அவளுக்கு நினைவு வந்தது.

அப்போது, கணேசன், 'அப்படியானால், மனைவியின் அனுமதியுடன் கல்யாணம் செய்துகொண்டு விடுங்களேன், சார்! வேலைக்காரிக்கு வேலைக்காரி, பெண்டாட்டிக்குப் பெண்டாட்டி!' என்று சொல்லிச் சிரித்தபோது, ராமானுஜத்தின் முகத்தில் அசடு தட்டியதும் கூட அவளுக்கு ஞாபகம் வந்தது.

அந்த எண்ணத்தை அவர் உள்ளத்தில் விதைத்தது கணேசன்தானே, இல்லாவிட்

டால் அது நீறு பூத்த நெருப்பாக ஏற்கனவே அவர் நெஞ்சில் பதுங்கியிருந்ததோ, அதற்குப் பிறகு அவர் முன்னிலும் அடிக்கடி அசடு வழிந்ததையும், முறையற்ற பார்வைகளை அரைக் கண் மூடியவாறு தன்மீது பதித்ததையும் இப்போது நினைவுகூர்ந்த சகுந்தலா இனி அநிச்சையாகவும் அவரைப் பார்க்க நேர்வதைத் தவிர்க்க வேண்டும் என்று நினைத்துக்கொண்டாள்.

இருபத்தேழு வயதாகியும் தனக்குத் திருமணம் ஆகாது இருக்கின்ற நிலை ராமானுஜத்தை அசடு வழியச் செய்யத் தொடங்கி இருப்பது குறித்து நினைத்துப் பார்த்தாள். திருமணம் எனும் சடங்கு ஆயிரக் கணக்கில் பணம் செலவழிக்க முடிகிற பெற்றோருக்குப் பிறந்த பெண்களின் ஏகபோக உரிமையாகி விட்ட அவலத்தையும் நினைத்துப் பார்த்தாள். தன் கவர்ச்சி, தன் நன்னடத்தை, அத்துடன் தான் மாதா மாதம் சம்பாதிக்கும் நானூறு ரூபாய் — அது மேலும் ஆண்டு தோறும் கூடும் சாத்தியக்கூறு — ஆகியவை போதாமல், கையில் ரொக்கமாகவும் வேறு சில ஆயிரங்களையும் தன் உடம்பில் நகைகளாகச் சில ஆயிரங்களையும் எதிர்பார்க்கும் பெற்றோர்களையும், பெற்றோர் கிழிக்கின்ற கோட்டை அந்த ஒன்றில் மட்டும் தாண்ட விரும்பாத கோழை இளைஞர்களையும் அவள் தனக்குள் திட்டித் தீர்த்தாள்.

'இந்தக் கிழட்டுச் சனியன் பார்க்கிற பார்வையே சரியாக இல்லே.' வேறு பிரிவு கேட்டுக் கொண்டு இங்கிருந்து போய்விட வேண்டும்...' — இப்படியெல்லாம் எண்ணியவாறு அவள் மற்றொரு பைலை எடுத்துப் பிரித்தாள்....

அன்று பிற்பகல் ராமானுஜம் ஒரு புதிய செய்தியை அறிவித்தார். பிரிவில் எல்லோரும் இருந்த நேரத்தில் கணேசனைப் பார்த்து, "கணேசா! இன்று சாயந்திரம் நான் சுந்தர காண்டம் பிரவசனம் பண்ணுகிறேன். வர முடியுமா?" என்று கேட்டுவிட்டு, எல்லாருமே வரலாம் என்று அறிவித்தார். சகுந்தலாவையும் அழைத்தார். அவர் கதா காலட்சேபம் செய்ய வல்லவர் என்பது அன்று தான் அவர்களுக்குத் தெரியும். சகுந்தலாவுக்குச் சிறிது வியப்புத்தான். 'அட, பரவாயில்லேயே!' என்பது போலவும், 'படிப்பது ராமாயணம் இடிப்பது பெருமாள் கோயிலா?' என்பது போலவும் அவரை ஒரு பார்வை பார்த்தாள். சகுந்தலாவின் வீடு அந்தக் கோயிலுக்குப் பக்கத்தில் இருந்ததால் அவளுக்குத் தனிப்பட்ட அழைப்பு விடுத்தார்.

தட்ட முடியாமல் சகுந்தலா தன் தாயுடன் அந்த ராமாயணச் சொற்பொழிவுக்குப் போனாள். சொற்பொழிவின்போது ராமானுஜம் பல குட்டிக் கதைகளைச் சொன்னார். அந்தக் காலத்தில், சீதைக்குத் தக்க பருவத்தில் திருமணம் நடந்ததைப் பற்றிப் பேசிய அவர், இந்தக் காலத்துப் பெண்கள் பருவங் கடந்தும் கன்னிகளாக நின்று கொண்டிருக்க





## புதிய தூதர் புதியவரல்ல

புதிய அமெரிக்க தூதர் கோஹீன் இந்தியாவுக்குப் புதியவரல்ல. இங்கேயே, அதாவது மகாராஷ்டிரத்தில் பிறந்தவர். பிறந்து, முதல் பதினைந்து ஆண்டுகள் இங்கேயே வாழ்ந்தார். கல்வி கற்றது கொடைக்கானல் அமெரிக்கப் பள்ளியில்.

இவரது பெற்றோர் நாற்பது ஆண்டுகளை இந்தியாவில் மருத்துவப் பணியில் கழித்த மதப் பிரசாரகர்கள். இவரது தாய்வழி தாத்தா பஞ்சாப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராக விளங்கியவர்.

அமெரிக்கா, பிரின்ஸ்டன் சர்வகலாசாலையில் பட்டம் பெற்ற கோஹீன் அதன்பிறகு பலமுறை இந்தியாவுக்கு வந்து போயிருக்கிறார். ஃபோர்டு நிறுவனம், ராக்கிஃபெல்லர் நிறுவனம் ஆகியவை இந்தியா தொடர்பாகக் கொண்டுள்ள திட்டங்களில் ஆலோசகராகவும், தர்மகர்த்தாவாகவும் இருந்திருக்கிறார்.

பிரின்ஸ்டனில் படித்தபோது சம்பளம் கட்ட இவர் பகுதி நேர வேலை செய்ய வேண்டியிருந்தது. இருப்பினும் படிப்பிலும் விளையாட்டிலும் சிறந்தார்.

கல்வி, நிர்வாகத் துறைகளில் படிப்படியாக இவர் குவித்த வெற்றிகள் காரணமாகத் தமது முப்பத்தேழாம் வயதிலேயே பிரின்ஸ்டன் சர்வகலாசாலையின் தலைவரானார். கடந்த இருநூறு ஆண்டுகளில் அந்த சர்வகலாசாலை இவ்வளவு இளம் வயதினரான ஒரு தலைவரைப் பெற்றதில்லை.

டாக்டர் கோஹீனுக்கும் அவர் மனைவி மார்கரெட்டுக்கும் குழந்தைகள் ஆறு. இவர்களில் கடைசிக் குழந்தைக்கு வயது இருபது. கெர்ட்ரூட் என்ற பெண், 66-67ல் சென்னை எதிராஜ் கல்லூரியில் பாடம் போதித்திருக்கிறார்!

ஆதாரம்: USA Commercial News Letter

---

நேர்ந்திருக்கும் இழிநிலைக்குத் தாவினார். அதிலிருந்து கைம்பெண்களின் மறுமணத்துக்குத் தாவினார். கைம்பெண்கள் மணம் செய்துகொள்ளுதல் சாஸ்திர விரோதம் அன்று என்று ஒரு 'மினி' விவேகானந்தர் அவதாரம் எடுத்து அறிவித்தார். அப்போதெல்லாம் அவர் பார்வை கூட்டத்தில் சகுந்தலாவின் இருப்பிடம் தேடி மொய்த்தது. கவர்ச்சி நிறைந்த கருத்துக்களை அவர் வாரி வழங்கியது தன் கருத்தைக் கவரும் பொருட்டுத்தான் என்பது அவளுக்குப் புரிந்தபோது, அவரது அசட்டுத்தனத்தை எண்ணி அவளுக்குச் சிரிப்புப் பொங்கியது.

அந்தச் சொற்பொழிவைப் பாராட்டி மறுநாள் கணேசனும், ரங்கநாதனும் பேசிய போதுதான் அவர்களும் கோயிலுக்கு வந்திருந்தது பற்றி அவளுக்குத் தெரிய வந்தது. ''என்ன சார்! பார்த்தால் பத்தாம் பசலி மாதிரி தெரிகிறீர்கள். இவ்வளவு முற்போக்கான கருத்துக்களை உடையவர் நீங்கள் என்பது ரொம்ப ஆச்சரியமான விஷயம், சார்!'' என்ற கணேசன், அவ்வாறு சொன்னபோது, தன்மீது பார்வையைச் செலுத்தியதையும் காண அவள் தவறவில்லை.

இது நடந்ததற்குப் பிறகு சுமார் ஒரு மாதம் கழித்து ஒரு நாள் பிரிவில் தானும் அவளும் மட்டுமே இருக்க நேர்ந்த நேரத்தில் ராமானுஜம், ''உங்களிடம் ரொம்ப நாளாக ஒன்று கேட்க வேண்டும் என்பது...'' என்றவாறு தொண்டையைச் செருமிக்கொண்டு அவளுக்கு முன்னால் வந்து நின்றார்.

அவர் என்ன கேட்கப் போகிறார் என்பது தனக்குப் புரிந்தாலும், துணிவுடன் அவரைப் பார்த்து, ''என்ன சார்?'' என்று குரலில் தேசல் இன்றி, அவள் அவரை வினவினாள்.

''...நீங்கள் என்ன நினைத்துக் கொள்ளுவீர்களோ என்னவோ என்று பயமாக இருக்கிறது...''

''சும்மா சொல்லுங்கள் சார், நான் ஒன்றும் நினைத்துக் கொள்ள மாட்டேன்.''

''வேறொன்றும் இல்லை. படுத்த படுக்கையாக இருக்கும் என் மனைவியின் சம்மதத்துடன் நான் இன்னொரு கல்யாணம் பண்ணிக்கொள்ளலாமா என்று பார்க்கிறேன்...''

''இன்று சாயந்திரம் என் வீட்டுக்கு வாருங்களேன், சார்! அங்கேயே விவரமாகப் பேசலாம். எனக்கென்று எங்கள் வீட்டில் தனி அறை இருக்கிறது. யாருடைய தொந்தரவும் இல்லாமல் நிதானமாகப் பேசலாமே?'' என்று அவசரக் குரலில் அவரை இடைமறித்தாள்.

''நீங்கள் ரொம்பவும் இன்டலிஜென்ட்!'' என்று பல்லைக் காட்டிய ராமானுஜம் நிறைவான புன்னகையுடன் தம் இருப்பிடம் சென்றார்.

அன்று மாலை சகுந்தலாவின் அறையில் எதிரும் புதிருமாக அவரும் சகுந்தலாவும் உட்கார்ந்திருந்தபோது, அவள் அக்கா காப்பியும் சிற்றுண்டியும் கொணர்ந்து கொடுத்து விட்டுச் சென்றாள்.

''உங்கள் அக்காவா?''

''ஆமாம்...''

''பாவம்!'' என்ற சொல்லும், அதைத் தொடர்ந்த ஒரு பெருமூச்சும் ராமானுஜத்திடமிருந்து வெளிப்பட்டன.

அறை வாசலுக்குப் போன சகுந்தலா, ''அக்கா! ஆபீஸ் விஷயமாகப் பேச வேண்டியிருக்கிறது. யாரையும் உள்ளே விடாதே'' என்று இரைந்த குரலில் சொல்லிவிட்டு, வந்து உட்கார்ந்து கொண்டாள்.

ராமானுஜம் வடையை முறித்து வாயில் போட்டுக் கொண்டே, ''இப்படி ஓர் அக்கா உங்களுக்கு இருப்பதாக நீங்கள் சொல்லவில்லையே — பேச்சு வாக்கில்கூட? ஆமாம், எப்போது இப்படி ஆயிற்று? குழந்தை இருக்கிறதா?'' என்று விசாரித்தார்.

''குழந்தைகள் இல்லை. பத்து வருஷங்கள் ஆகின்றன, அத்தான் போய். அவள் அத்தானுடன் ஒரு வருஷம் மட்டுமே வாழ்ந்தாள்.''

''கேட்க ரொம்ப வருத்தமாக இருக்கிறது....''

''நேற்று உங்கள் சொற்பொழிவைக் கேட்க அக்காவை அழைத்துக் கொண்டு வராமல் இருந்து விட்டோமே என்று அது முடிந்த பிறகு மிகவும் வருத்தப்பட்டேன்...''

ராமானுஜம், வடையை மென்றவாறே ''உண்மையிலேயே நன்றாய் இருந்ததா என்ன?'' என்று ஆவலை வெளிக்காட்டிய வண்ணம் வினவினார்.

# வளரும் பருவம் கால்ஷியம்-ஸாண்டோஸ்® பருவம்

வளர்ச்சி நின்றுவிட்ட பிறகு, எவ்வளவு கால்ஷியம் சாப்பிட்டாலும் பற்கள் வலுவாகவும், எலும்புகள் ஆரோக்கியமாகவும் வளர உதவ முடியாது.

ஒழுங்காக கால்ஷியம் வில்லைகள் சாப்பிட்டு வரும் குழந்தைகளின் வளர்ச்சி மற்ற குழந்தைகளைவிட, அதிவேகமாக இருக்கிறது என்றும் அவர்களுக்கு அதிக எடை கூடுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள்* நிரூபித்துள்ளன. உண்மையில், வளரும் பருவம் கால்ஷியம்-ஸாண்டோஸ் பருவம்!

பற்கள் ஆரோக்கியமாகவும், எலும்புகள் உறுதியாகவும் அமைந்து வளர்வதற்கு கால்ஷியம்-ஸாண்டோஸ் வில்லைகள் துணை புரிகின்றன. வைட்டமின் C, D மற்றும் B12 ஆகிய சத்துக்களால் வளமூட்டப்பட்ட, ராஸ்ப்பெர்ரி சுவை கொண்ட கால்ஷியம் ஸாண்டோஸ் வில்லைகள் ருசிமிக்கவை. குழந்தைகளுக்கு மிகவும் பிரியமானவை!

கால்ஷியம்-ஸாண்டோஸ்-ஸ்விட்ஸர்லாந்தில் ஸாண்டோஸ் உருவாக்கியுள்ள, உலகிலேயே தலை-சிறந்த கால்ஷியம்.

*கால்ஷியம் சப்ளிமென்டேஷன் டெஸ்ட்ஸ்-டாக்டர் டபிள்யு. ஆர். அக்ராயிட் மற்றும் டாக்டர் பி. ஜி. கிருஷ்ணன் சமர்ப்பித்துள்ள, ஆராய்ச்சித் தாள்.





## கால்ஷியம்-ஸாண்டோஸ்®

வலுவுள்ள பற்களுக்கும், உறுதியான எலும்புகளுக்கும்




daCunha/CS/20 N TAM

# வருமான வரி செலுத்துவோர் கவனிக்கவும்!

## வருமான வரி 'ரிட்டேர்ன்' மீண்டும் அனுப்ப வேண்டிய சமயம் வந்து விட்டது!

**நீங்கள் அனுப்பும் 'ரிட்டேர்ன்' சரியாகவும் முழு விவரங்களுடனும் இருக்கிறதா என்பதை உறுதிப்படுத்த உங்களின் வசதிக்காக இதோ சில குறிப்புகள்:**

- நிர்ணயிக்கப்பட்ட பாரத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறீர்களா?
- ("ரிட்டேர்ன் ஆஃப் இன்கம்") என்று பாரத்தின் முதல் பக்கத்தில் எழுதப்பட்டுள்ளதற்குக் கீழுள்ள அறிவுரைகளைப் பார்க்கவும்.
- வருமான மதிப்பீட்டு வருடம், மற்றும் முந்தைய வருட பெர்மனென்ட் அக்கவுண்ட் நம்பரை சரியாகக் குறித்திருக்கிறீர்களா என்று பார்க்கவும்.
- ரிட்டேர்னுக்கு சம்பந்தப்பட்ட அனுபந்தங்களை இணைத்திருக்கிறீர்களா என்று பார்க்கவும்.
- (அ) நகல்களை (முறையாகக் கணக்கு வைத்திருப்பின்)
  1. வர்த்தகக் கணக்கு/உற்பத்திக் கணக்கு
  2. லாபநஷ்டக் கணக்குகள்
  3. பேலன்ஸ் ஷீட்
  4. டைரக்டர்கள்/பங்குதாரர்களின் பெர்சனல் அக்கவுண்ட்கள்.

  (ஆ) முறையான கணக்கு வைக்காத பட்சத்தில் வரவு செலவு கணக்கின் அறிக்கையை இணைத்திருக்கிறீர்களா?
- கீழ்க்கண்ட தஸ்தாவேஜுகளை வருமான வரி ரிட்டேர்னோடு இணைத்திருக்கிறீர்களா? (எங்கெங்கு தேவையோ அங்கு)
  1. சம்பளம் டிவிடெண்ட் போன்றவைகளிலிருந்து வரி பிடித்தம் செய்த சான்றிதழ்கள்.
  2. அட்வான்ஸ் டேக்ஸ் கட்டிய சலான்கள்.
  3. செல்ஃப் அசெஸ்மென்ட்படி செலுத்திய வரிக்கான சலான்கள்.
  4. கம்பல்சரி டெபாஸிட் செலுத்தியதற்கான ரசீது.
  5. ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் தவணைத் தொகைகளுக்கான ரசீதுகள்.

  ரிட்டேர்ன்வெரிபிகேஷன் பாரத்தில் காலி இடங்களைப் பூர்த்தி செய்து தேவையற்றவற்றை அடித்து விட்டீர்களா? ரிட்டேர்ன் சரியாகப் பூர்த்தி செய்யப் பட்டுள்ளதாவென்று சரி பார்த்து வெரிபிகேஷன் பாரத்தில் நிர்ணயிக்கப்பட்ட இடத்தில் தேதியுடன் கையெழுத்திட்டுள்ளீர்களா?
- அக்நாலெட்ஜ்மென்ட் பாரத்தில் (ஐ டி என் எஸ்-189) 'எ' மற்றும் 'பி' பாகங்களை பூர்த்தி செய்து ரிட்டேர்னுடன் இணைத்து விட்டீர்களா?

மேற்கண்ட விவரங்களை முழுதுமாக செய்திருப்பின் 'சம்மரி அசெஸ்மெண்ட்' திட்டத்தின் கீழ் வருமான வரி அலுவலகத்திற்கு நீங்கள் வராமலேயே வரி மதிப்பீடு செய்யப்பட்டு விடும்.

## உங்களுக்கு சேவை செய்ய எங்களுக்கு உதவவும்

வெளியிட்டது:



**டைரக்டர் ஆஃப் இன்ஸ்பெக்ஷன்**
(வெளியீடுகள் மற்றும் மக்கள் தொடர்பு)
**வருமான வரித்துறை, புதுடெல்லி**

டி.எ.வி.பி. 77/63

''உண்மையாகத்தான். நான் எதற்குப் பொய் சொல்ல வேண்டும்?... சரி...இப்போது உங்கள் விஷயத்துக்கு வருகிறேன். என் அக்காவை உங்களுக்குப் பிடித்திருக்கிறதா சார்?''

மென்று முடித்துவிட்ட வடையை விழுங்கத் தோன்றாமல், ராமானுஜம் விழிகள் விரிய அவளை வியப்புடன் பார்த்தார்.

''என்ன சார், பேசாமல் இருக்கிறீர்கள்?'' —பதில் சொல்ல வேண்டிய நெருக்கடிக்குத் தள்ளப்பட்ட அவர், வடைக் கூழை விழுங்கி விட்டு வாயைத் திறந்தார்.

''நீங்கள் என்ன கேட்கிறீர்கள் சகுந்தலா?''

''என்ன சார்! இது புரியவில்லையா உங்களுக்கு? என் அக்காவைப் பிடித்திருக்கிறதா என்றுதான் கேட்கிறேன்!''

மிடற்றுக் குமிழ் மேலும் கீழும் ஏறி இறங்கச் சில விநாடிகள் அவளை வெறித்த அவர், ''நான் மணக்க ஆசைப்பட்டது உங்களைத் தான் சகுந்தலா!'' என்றார் கரகரப்புடன்.

''ஏன் சார்? எங்கள் அக்காவுக்கு என்ன குறைச்சல்? முப்பத்தாறு வயசுதான் ஆகிறது அவளுக்கு. உங்களைக் காட்டிலும் ஒன்பது வயசு சின்னவள், சார்! உங்களைப் போல் பரந்த எண்ணம் படைத்த ஒருவருக்காகத் தான் இத்தனை நாட்களாகக் காத்துக் கொண்டிருந்தேன்... பயன்படாத மனைவியை உடைய உங்களைப் போன்றவருக்குக் கணவனை இழந்த என் அக்காதான் பொருத்தமான ஜோடியாக இருப்பாள். அதுதான் நியாயமும் கூட. தவிர, கைம்பெண்களின் மறுமணம் பற்றிய முற்போக்கான கருத்துக்களை யெல்லாம் கொண்டிருக்கிறீர்களே, சார்? உங்களைப் போல் யார் கிடைப்பார்கள்?''

ராமானுஜம் எழுந்து கொண்டார்.

''என்னை மன்னியுங்கள், சகுந்தலா! உங்க அக்காளை ஏற்றுக் கொள்ள நான் தயாராயில்லை!'' என்ற சொற்களுடன் விடைபெற்றுக் கொண்டு அறையை விட்டு வெளியே சென்று தெருவில் இறங்கி நடந்தார்.

அவர் சென்ற திசையை நோக்கிச் சன்னல் வழியே 'தூ' வென்று ஆத்திரத்துடன் காறித் துப்பிய சகுந்தலாவுக்கு அந்த எரிச்சலிலும் சிரிப்புப் பொத்துக் கொண்டு வந்தது. மனசுக்குள் சிரித்து ஓய்ந்ததும், ''பத்து வயசில் ஒரு பிள்ளையை உடைய இவன், மனைவி உயிருடன் இருக்கும்போதே இரண்டாவது திருமணம் செய்துகொள்ளப் போகிறானாம். ஆனால், இவனுக்கு வருகிற இரண்டாவது மனைவி கூடக் கன்னி கழியாதவளாக இருக்கவேண்டுமாம். கிழட்டு வண்டானாலும் கூடப் புத்தம் புது மலர் கேட்கிறது! நல்ல நியாயம்!'' என்று அவள் உதடுகள் முணுமுணுத்தன.

---



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி

**பொ**ன்னியின் புதல்வர் பெயரால் ஆண்டு தோறும் நடைபெறும் இச் சிறுகதைப் போட்டிக்குப் பொன்னான சிறுகதைகளை வரவேற்கிறோம். இளம் எழுத்தாளர்களின் புதுமைப் படைப்புக்களுடன் பிரபல எழுத்தாளர்களின் சிறிய படைப்புக்களையும் எதிர்பார்க்கிறோம். மர்மக் கதை, சமூகக் கதை, புராணக் கதை, சரித்திரக் கதை, நகைச்சுவைக் கதை, கிராமச் சூழல் கதை, பிரச்னைக் கதை போன்ற எதுவாக வேணுமானாலும் இருக்கலாம். கதைக்காகவே எழுதப்பட்ட கதையாகவும் இருக்கலாம்.

இலக்கிய நயத்துடன் அமையும் சிறந்த கதைகளுக்குப் பின்வருமாறு பரிசுகள் வழங்க உத்தேசித்திருக்கிறோம்.

| | | |
|---|---|---|
| முதல் பரிசு | ரூ. | 1000/- |
| இரண்டாம் பரிசு | ரூ. | 500/- |
| மூன்றும் பரிசு | ரூ. | 500/- |

(தலா ரூ. 250 வீதம் இரு கதைகளுக்கு)

தவிர, பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 100 பரிசு பெறும்.

**முடிவு தேதி: ஜூன் 15உ**

நிபந்தனைகள்: சிறுகதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை பதித்த சுய விலாசமிட்ட உறைகளை அனுப்புதல் வேண்டும். ○ சிறுகதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேல் போகாமல் அமைவது நலம். ○ கடிதப் போக்குவரத்து கிடையாது. ○ கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. ○ உறையின் மேல் அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி என்று குறிப்பிடுதல் அவசியம்.

ஆசிரியர், கல்கி, சென்னை – 600031



நோய்களின் அட்டூழியத்தால் சேலம் அவதிப்பட்ட கால கட்டம் அது. 1917ல் கொள்ளை நோய் காரணமாக 671 பேரும் அம்மையினால் 108 பேரும் மாண்டனர். போதாக் குறைக்கு வெளியூரிலிருந்து வந்து சேர்ந்த காலராவுக்கு 115 பேர் பலியாயினர். நகருக்கு வெளியே ஒரு புது இடத்துக்குத் தானியக் கிடங்குகளை அப்புறப்படுத்தும் யோசனையைக் கொள்ளை நோய் ஒழிப்புத் திட்டத்தின் ஓர் அம்சமாக ஸி. ஆர். வைத்திருந்தார். 1

செவ்வாய்ப்பேட்டையில் வாழ்ந்த ஏழைகளுக்குக் குறிப்பிட்ட கொள்கையின் அடிப்படையில் மனைப் பட்டா வழங்க வேண்டும் என்பதற்காக ஸி. ஆர்., சக்கி ஏரிப் படுகையையும் செவ்வாய்ப்பேட்டையை யொட்டி வடக்கேயுள்ள நிலத்தையும் அரசு ஆர்ஜிதம் செய்ய வேண்டும் என்று கோரியிருந்தார். 2 இந்தத் திட்டமும் கொள்ளை நோய் எதிர்ப்புக்காக அவர் விவரித்த திட்டமும் என்ன ஆயின என்று தெரியவில்லை.

சேலம் கல்லூரிக்கு லட்சம் ரூபாய் செலவில் புதிய கட்டிடம் அமையலாம் என்று அரசு அங்கீகாரமளித்து விட்டது. ஆனால் வேலை ஆரம்பமாகவில்லை. ஸி. ஆர். அரசுக்குப் பணிச் சென்று ஞாபகப்படுத்திக் கடிதம் எழுதினார்: "வேலை தொடங்கும் என்று நகரசபை ஒவ்வொரு நாளும் எதிர்பார்க்கிறது. தாமதத்துக்கான காரணங்கள் ஏதும் அதற்குத் தெரியவரவில்லை." 3

சேலம் நகரின் விரிவாக்கத் திட்டத்துக்கு ஸி. ஆரின் தூண்டுதலும் ஒரு காரணம். நகரின் எல்லையை யொட்டி நிலம் ஆர்ஜிதம் செய்ய நகரசபைக்கு அரசின் அனுமதி தேவைப்பட்டது. இதற்கென ஸி. ஆர்., நரசிம்ம அய்யருடன் சென்னைக்குச் சென்றார். ஸி. ஆர். நகரசபைத் தலைவராக வேண்டும் என்று யாரும் நினைத்துக் கூடப் பாராத தருணம் அது.

கவர்னரின் செயற்குழு உறுப்பினரான ஸர் பி. எஸ். சிவஸ்வாமி அய்யர் மிகவும் உதவியாக இருந்தார். எனவே புதிய குடியிருப்புப் பகுதி பின்னால் சிவஸ்வாமிபுரம் எனப் பெயர் பெற்றது. 1917 மார்ச்சில் நகரசபை, புதிய விரிவாக்கப் பகுதியில் மனைகளை ஏலம் விட்டபோது ஸி. ஆர். தாமே ஒரு மனையை வாங்கியிருந்தார். இதற்கு நான்கு மாதங்களுக்குப் பிறகு அவர் நகரசபைத் தலைவரானார்.

நகரசபைக்குச் சொந்தமான நிலத்துக்கு நிறையப் பணம் பெற வேண்டும் என்ற ஆசையில் ஸி. ஆர். தாமே ஏலக் கத்தியைக் கையிலேந்திப் புதிதாகச் சில மனைக்கட்டுக்களை ஏலம் விட்டார். ஏலத்தில் கிடைத்த லாபம், நகரசபை கொடுக்க வேண்டிய கடன் பாக்கிகளைக் குறைக்க உதவியது.

## மதுவிலக்கும் தீண்டாமை ஒழிப்பும்

மது. தீண்டாமை ஆகிய இரு அரக்கர்களையும் தமது வாழ்நாள் முழுதும் எதிர்த்துப் போராட ஸி. ஆர். தீர்மானித்திருப்பது அவர் நகரசபைத் தலைவராக இருந்த கால கட்டத்தில் தெரிய வந்தது.

சேலத்தின் கைத்தறி நெசவாளர்களை மது, ஒட்டாண்டிகளாக்கிக் கொண்டிருந்தது. நாட்டுச் சாராயத்தை நகரில் விற்க வழங்கப்பட்டிருந்த லைசென்ஸ்களில் பெருவாரியானவற்றை ரத்து செய்து விடுமாறும் பாக்கியுள்ள லைசென்ஸ்தாரர்கள் நகருக்கு வெளியே தான் விற்க வேண்டும் என்று கட்டாயப்படுத்துமாறும் அரசை, நகரசபை, ஸி. ஆரின் தூண்டுதல் பேரில் கேட்டுக் கொண்டது.



# ராஜாஜி வாழ்க்கை வரலாறு

ஸி. ஆர். வற்புறுத்தியதன் பேரில் இதே போன்ற வேண்டுகோள்களை அசாதாரணமான இரு கூட்டங்களில் நெசவாளர்களே கலெக்டருக்கு விடுத்தனர். 4 லே, ஸி. ஆர்., போலீஸ் சூப்பரின்டெண்டு பி. பி. ஸ்விட்டிங் ஆகியோரும் வேறு சிலரும் அடங்கிய கூட்டுக் குழு, சாராயக் கடைகள் பதினைவிருந்து இரண்டாகக் குறைய வேண்டும்

1. From report of Salem Municipal Council' File G.o. 1301 M of 1918, Tamil Nadu Archives.
2. From letter of Salem Municipal Chairman File G.o. 1301 M of 1918, Tamil Nadu Archives.
3. மேற்படி.
4. The Hindu, 15-11-17.

என்றும் கள்ளுக் கடைகள் பதினுலிலிருந்து ஆறாகக்குறைய வேண்டும் என்றும், லைசென்ஸ் பெற்று எஞ்சி நிற்கும் இக்கடைகளும் நகரின் மையத்திலிருந்து வெளியேற வேண்டும் என்றும் தீர்மானித்தது.

மேலும் இக்குழு விற்பனை காலத்தைக் குறைத்தது. மதுக் கடைகளில் பெண்களை வேலைக்கு வைப்பதற்கு — அவர்கள் ஏலம்



**ராஜ்மோகன் காந்தி**

எடுத்தவர்களைச் சேர்ந்தவர்களாயினும் — தடை விதித்தது.

இந்த நடவடிக்கைகள் அசாதாரணமானவை எனில் இவற்றை அமல்படுத்துவதில் ஒரு தீவிரவாதிக்கும் கலெக்டருக்கும் இடையில் காணப்பட்ட ஒத்துழைப்பும் அசாதாரணமாகத்தான் இருந்தது. லே இம்முயற்சிக்கு நிகரற்ற அனுதாபம் காட்டினர். முடிந்த அளவில் எல்லாவித உதவிகளையும் வழங்கினர்.[5]

### மூன்று நிகழ்ச்சிகள்

ஜாதி விஷயத்தில் வி. ஆரின் கொள்கையை மூன்று நிகழ்ச்சிகள் படம் பிடித்துக் காட்டின. ஒரு நிகழ்ச்சி, 1917ல் சேலம் வந்த தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த மதப் பிரசாரகர் சுவாமி சகஜாநந்தாவைப் பற்றியது. வி. ஆர். உற்சாகப்படுத்தியதன் பேரில் ஒரு நண்பர் குழாம், சேலம் கல்லூரி முதல்வர் யக்ஞநாராயண அய்யர் வீட்டில் சகஜாநந்தாவுக்கு ஒரு விருந்துக்கு ஏற்பாடு செய்தது. நகரசபைத் தலைவரும் விருந்தில் கலந்து கொண்டார்.

சகஜாநந்தாவைப் போல் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு ஒருவர் தமது வீட்டில் சாப்பாடு போடுவது பெருந் தவறு என்றால் அதற்கு உடந்தையாக இருந்தவர்களும் குற்றவாளிகளே. நகரின் பிராமணச் சமூகத்தினரில் பெரும்பாலோர் இந்தப் பயங்கரம் கண்டு கல்லூரி முதல்வரையும் வி. ஆரையும் விருந்தில் பங்கு பற்றிய மற்ற பிராமணர்களையும் ஜாதிப் பிரஷ்டம் செய்தனர். திருமண வைபவங்களுக்கும் ஈமக் கடன்களைச் செய்யும்போதும் அவர்களை அழைப்பதில்லை. இதைவிடத் தீவிர நடவடிக்கை என்னவெனில் சேலத்திலிருந்த சாஸ்திரிகள் யாரும் அவர்கள் இல்லங்களில் சிராத்தம் நடத்தி வைக்க வராமலிருந்ததே.

விவாதத்துக்குள்ளான அந்த விருந்துக்குப் பிறகு சில ஆண்டுகளுக்கு அக்கம் பக்கத்து ஊர்களிலிருந்து தருவிக்கப்பட்ட சாஸ்திரிகள் சிராத்தம் போன்ற சடங்குகளை நடத்தி வைத்தனர். சாஸ்திரிகளை நம்பிக் கொண்டிருப்பதற்குப் பதில் சில ''குற்றவாளிகள்'' மந்திரங்களைத் தாங்களே மனனம் செய்து விட்டனர். இந்தச் சந்தர்ப்பத்தில் வி. ஆருக்குத் தேவைப்பட்டபோது உதவியாக இருந்தார் மங்காவின் தகப்பனர் சம்பங்கி அய்யங்கார்.

### அக்கிரகாரத்தின் எதிர்ப்பு

இரண்டாவது சம்பவம் வி. ஆரின் நகரசபைத் தலைமைப் பதவியுடன் நேரடியான தொடர்பு கொண்டிருந்தது. நகரின் பல் வேறுபகுதிகளில் குடிநீர் குழாய்களைக் காலையில் திறந்து விடவும் மாலையில் மூடிவிடவும் நகரசபைப் பணியாளர்கள் இருந்தனர்.

இவர்களில் தீண்டாதவனாகக் கருதப்பட்ட ஐந்தாவது வர்ணத்தைச் சேர்ந்த ஒருவன் 1918 ஜூலை மாதத்தில் அக்கிரகாரத்திலிருந்த பொதுக் குழாய்க்குப் பொறுப்பாளி ஆக்கப்பட்டான். இது நகரின் தண்ணீர் விநியோகத்துக்குப் பொறுப்பேற்றிருந்த பொறியியலாளர் ஏ.வி. ராமன் செய்த காரியமே யன்றி வி. ஆருடைய வேலையல்ல.

எவ்வாறாயினும் அக்கிரஹாரக் குழாயைக் கையாள்வதன் மூலம் அந்தத் தீண்டாதான் பிராமணர்களின் தண்ணீரைத் தீட்டாக்கிக் கொண்டிருந்தான். பலத்த ஆட்சேபனை எழுந்தது.

நகரசபை வரிகளைச் செலுத்துவோரும், மரியாதைக்குரியவர்களும் பொறுப்பு மிக்கவர்களுமான நாறு பேர் அவ்வூழியர் நகரின் வேறு பகுதிக்கு மாற்றப்பட வேண்டும் என்று நகரசபையிடம் கோரினர்.[6] ஹிந்து பத்திரிகையின் ஆசிரியருக்குக் கடிதங்கள் பகுதியில் வி. ஆர். தாக்குதலுக்கு உள்ளானர்.

---

5. From Report of Salem Municipal Council. File G.O. 1301 M of 1918, Tamil Nadu Archives.
6. The Hindu, July 1918.



ஒரு வீட்டு வாசலில் இருந்த அறிவிப்பு: ''தபால்காரருக்கு : நான் வீட்டில் இல்லை. எனக்கு ஒரு பார்சல் கொண்டு வருவீர்கள். என் வீட்டு அழைப்பு மணியை அழுத்துங்கள். உள்ளே இருக்கும் என் நாய் குரைக்கும். இதைக் கேட்டுப் பக்கத்து வீட்டு நாயும் குரைக்கும். பக்கத்து வீட்டுக்காரருக்குக் காது கேட்காது. ஆனால் தம் நாய் குரைப்பதைப் பார்த்து விட்டு, யோசனையுடன் வாசலுக்கு வருவார். அவரிடம் தயவு செய்து அந்தப் பார்சலைக் கொடுத்து விடுங்கள். நான் திரும்பி வந்ததும் பெற்றுக் கொள்கிறேன். நன்றி.'' — விகடம் - முத்து

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

ஆனால் தீண்டாதார் நம்பிக்கை பிறக்கக் கண்டனர். இப்பிரச்னை குறித்து நகரசபையின் கூட்டம் ஒன்று பெரும் பரபரப்புக்கிடையில் நடைபெற்றது. 7 கூட்டம் நடந்த கூடத்தைச் சுற்றிலும் ஐந்தாவது வர்ணத்தைச் சேர்ந்த பலர் நெருக்கியடித்து நின்றனர். உள்ளே பிராமணப் பிரதிநிதிகள் தங்கள் கருத்தை அழுத்தமாக வெளியிட்டனர்.

நகர சபை உறுப்பினர்கள் சரி சமமாகப் பிரிந்து நின்றனர். முடிவு காணப் பயன்படும் நகரசபைத் தலைவரின் வோட்டை ஸி. ஆர்., அந்த ஊழியர் அக்கிரகாரத்திலேயே தொடர்ந்திருக்கும் வகையில் பயன்படுத்தினார்.

பிராமண விதவைகள் இப்போது ஸி. ஆரை வெறுப்பை உமிழும் கண்களால் நோக்கினர். ஒரு நண்பர் அவரைக் கேட்டார்: ''என் பாட்டியை நீ கொல்ல விரும்புகிறாயா? இரண்டு நாட்களாக அவள் சாப்பிடவேயில்லை.'' 8

ஸி. ஆர். விட்டுக் கொடுக்கவில்லை. சில காலத்துக்குப் பிறகு எதிர்ப்புக் குறைந்தது. பிரிட்டிஷ்காரருக்குச் சொந்தமான சென்னைப் பத்திரிகை மெயில், ''சுமாய்க்காரனுக்குச் சேலத்தில் காண்பிக்கப்பட்ட எதிர்ப்பு, இந்தியர் சுயாட்சிக்கு லாயக்கற்றது என்பதைப் பகிரங்கமாகக் காட்டுகிறது'' என எழுதியிருந்தது. ''அப்படியல்ல, நகர சபை நிகழ்ச்சிகள் இதற்கு நேர்மாறானதையே நிரூபிக்கின்றன'' என்று ஸி. ஆர். வாதாடினார். ''உயர் ஜாதிகளைச் சேர்ந்த நகரசபை உறுப்பினர்கள் ஜாதி துவேஷங்களைத் தங்களால் புறக்கணிக்கவும் மூழ்கடிக்கவும் முடியும் என்று காண்பித்துள்ளார்கள்'' என்றார். 9

சில ஆண்டுகளுக்குப் பிறகு, இந்தியாவில் ஜாதித் துவேஷங்கள் போடும் முட்டுக்கட்டைகளைப் பார்த்து ஒரேயடியாகப் பயந்து போயிருந்த பிரிட்டிஷ் நாடாளுமன்றக் குழு ஒன்றின் முன்னால் தோன்றிய கே. டி. பால், ஜாதிக் கட்டுப்பாடுகளில் மாறுதல்கள் ஏற்பட்டு வருவதை நிரூபிக்க மேற்படி நிகழ்ச்சியையே பயன்படுத்தினார். இவர் 1911ல் நகரசபைத் தேர்தலில் ஸி. ஆருக்கு எதிராக நின்றவர்.

## மீண்டும் முட்டுக்கட்டைகள்

சேலம் உயர்நிலைப் பயிற்சிப் பள்ளியில் படிப்பதற்குத் தகுதியுடையவர்கள் என்று தீண்டாதார்—வகுப்பைச் சேர்ந்த இரண்டு மாணவர்களைக் கருதினார் ஸி. ஆர். இதில் அவர் மீண்டும் முட்டுக்கட்டைகளைச் சந்திக்க நேர்ந்தது. இந்தியத் தலைமையாசிரியர், ஐரோப்பிய பள்ளி மேற்பார்வையாளர் ஆகிய இருவருமே ஆட்சேபித்தனர். சென்னையில் உள்ள ஒரு நிறுவனத்துக்கு இந்தப் பையன்களை அனுப்புமாறு ஸி. ஆரைக் கேட்டுக் கொண்டார்கள்.

சேலம் பள்ளியில் அவர்கள் சேர அனுமதி வழங்க வேண்டும் என்று வற்புறுத்திய ஸி. ஆர்., 'முடியாது என்று அதிகாரிகள் சொல்லட்டுமே பார்க்கலாம்' என்ற ரீதியில் செயலாற்றி வெற்றி கண்டார். அந்தப் பையன்கள் படிப்பை முடித்துப் பொறுப்புள்ள வேலைகளில் அமர்ந்தனர்.

தமது மனச்சாட்சியால் உந்தப்பட்ட ஸி. ஆர். அந்தக் காலத்தில் புரட்சிகரமானதாகக் கருதப்பட்ட போக்குகளை மேற்கொண்டிருந்தார். 10 தாம் வளர்ந்து ஆளான போது கொண்டிருந்த கருத்துக்களை உதறிவிட முடியாத நிலையில் சக்கரவர்த்தி ஐயங்கார் தம் மகனைப் பொறுமையற்றவராக எண்ணியிருக்க வேண்டும்.

ஆறு வயதான தமது பேரன் நரசிம்மன் ஒரு முறை அருகிலிருந்த ஆங்கிலோ இந்திய ரயில்வே அதிகாரி ஒருவர் வீட்டில் எலுமிச்சை சர்பத் அருந்தியதாகக் கண்டுபிடித்து விட்ட அவர் அவனைக் குற்றம் சாட்டி தண்டித்துக் கொண்டிருந்தார். ஆனால் ஸி. ஆர். மகனிடம் ''நீ ஒரு தவறும் செய்யவில்லை'' என்றார். பையன்களின் குடுமிகளில் பேன் வந்திருந்ததால் தகப்பனார் அவர்களுக்கு ஒட்ட முடி வெட்டி விட்டார். இதனால் சக்கரவர்த்தி அய்யங்கார் மீண்டும் ஆத்திரம் அடைந்தார். 11

சுமாய் விஷயத்தில் அக்கிரஹாரம் காட்டிய எதிர்ப்பு மாறி முன்சிப்பைப் பலமாகத் தாக்கியது. தமது ஈமக் கடன்களை நடத்தி வைக்க ஓர் அந்தணனாவது முன்வருவானா என்று அவர் யோசிக்க ஆரம்பித்து விட்டார். எனினும் ஸி. ஆரைப் பின்வாங்குமாறோ அல்லது அவசரப்படாதிருக்குமாறோ அவர் கேட்டுக் கொண்டதாக நினைக்க இடமில்லை. சக்கரவர்த்தி அய்யங்கார் தம் மகன்பால் கொண்டிருந்த உணர்ச்சிகளில் பெருமிதமும் வியப்பும், ஒப்புதலின்மையை எளிதில் வென்றுவிட்டன. (தொடரும்)

தமிழாக்கம்: ஷி. ராஜேந்திரன்



7. The Hindu, 27-7-18.
8. C.R. Chats Behind the Bars, Ganesan, Madras. 1931, P. 72.
9. The Hindu, 1-8-18 and The Mail, 30-7-18
10. K. Kamaraj, Rajaji 93, P. 105.
11. ஸி.ஆர். நரசிம்மன் நூலாசிரியரிடம் கூறியது.

சென்ற இதழில் பம்பாயில் திலகர் தங்கிய ஹோட்டல் ''ஸ்ரீதர் நிருதம்'' என்று தவறுதலாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. அதனை ''சர்தார் நிருதம்'' என்று திருத்திக் கொள்ள வேண்டுகிறோம். — ஆர்.

# வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு

## மங்கையர் மனதார விரும்பும் அழகுசாதன க்ரீம்...



## லக்மே வேனிஷிங் க்ரீம்




பாரத நாடெங்கும் அழகு
நங்கையருக்கு ஆதரவு: புது
மலர்ப் பொலிவுக்கு உறுதுணையான
லக்மே வேனிஷிங் க்ரீம்.
இலேசாக இழையும் இயல்பாக.
மேக்கப்புக்கு அதி உன்னதமான
ஆதாரப் பூச்சு!

லக்மே

## லக்மே லவெண்டர் டால்க் "அசல், தத்ரூபம் பிரெஞ்சு"








கொஞ்சி உறவாடும்
அசல் பிரெஞ்சு
லவெண்டர் பூக்களின்
மணம், நெஞ்சை
விட்டகலாது-பூமணக்கும்
புதுமலர்ச்சி. நாள்—
முழுதும் உங்களுக்கே.

daCunha L-VC LT 2 Q Tam.

## மும் முகம் எங்கள் மோகம்

ஒட்டி நின்ற நாம் இருவர்...
உறவுக்கொரு கடல், ஒன்றுபட்ட உணர்வு.
கட்டழகர் அவர் நெஞ்சம் கடலாழம்,
சட்டையோ கடல் நீலம்... அதற்கு
ஒட்டி இசைந்திடுதே என் உடுப்பு;
தொட்டணைக்குதடி அலைக்கரங்கள்.




என்றும் அவர்கள் ஆடை... இயற்கையாக மபத்லால்.

**மபத்லால் துணிவகைகள்:**

சூட்டிங் • ஷர்ட்டிங் • சேலைகள்
• டிரெஸ் மெட்டீரியல்ஸ் • ஷர்ட்

everest/463/MS-tm

# நன்னெறி முருகன்

டாக்டர் சுநீதி குமார் சட்டர்ஜி தமது 86வது வயதில் சமீபத்தில் மறைந்தார். அவருக்குத் தமிழர்களாகிய நாம் இதயபூர்வ மான அஞ்சலி செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம்.

வங்க மொழியைத் தவிர சிறந்த மொழி கிடையாது என்று பெருமிதத்துடன் ஓரளவு ஆணவமும் கொண்ட வங்க மக்களிடையேயும், மற்ற பல வடநாட்டு மொழி வல்லுனர்க ளிடையேயும் தமிழ் மொழியின் சிறப்பைத் துணிந்து எடுத்துக் கூறிய பெரியார் அவர்.

சுநீதி குமார் சட்டர்ஜி முதலில் ஆங்கில இலக்கியத்தில்தான் பட்டம் பெற்ருர். கல்கத்தா பல்கலைக் கழகத்தில் முதல் வகுப்பில் முதல் மாணவராக ஆங்கில இலக்கியத்தில் பட்டம் பெற்ருர். பின்னர் சமஸ்கிருதம் பயின்ருர். அதிலும் வேதகால சமஸ்கிருதத்தில் தனிப் புலமை பெற்ருர். பிறகு வங்க மொழியில் கவனம் செலுத்தினர். அப்புறம் மொழி இயலைப் பயில — (Linguistic) இங்கிலாந்து சென்ருர்.



நாளடைவில் டாக்டர் சட்டர்ஜி உலக மொழிகள் அனைத்திலுமே பயிற்சி பெற்ருர். மேனுட்டு புராதன மொழிகளான கிரேக்க லத்தீனிலிருந்து, இன்றைய நடைமுறை மொழிகளான பிரஞ்சு, ஜெர்மன், ஸ்பானிஷ் முதலிய மொழிகளும், சிலஆப்பிரிக்க மொழிகளும் கூட த் தெரிந்து வைத்திருந்தார். மொழிகளைத் தெரிந்து வைத்த தோடு மட்டுமின்றி அவற்றை உச்சரிப்பதிலும் சிரத்தையெடுத்துக் கொண்டு அம்மொழி பேசும் நாட்டினரே வியக்க உச்சரிப்பார். அவர் குரான் ஓதுவதைக் கேட்டால் எந்த வைதீக முஸ்லீமும் அயர்ந்து விடுவார். அவ்வளவு நெறப்பாக இருக்கும்.

சாஹித்ய அகாடமியின் தலைவராக விளங்கிய டாக்டர் சுநீதிகுமார் சட்டர்ஜிக்குத் ''தேசியப் பேராசிரியர்'' என்ற பெரும் பதவியும் இந்திய அரசாங்கம் அளித்துக் கௌரவப்படுத்தியது.

மொழி இயல் ஆராய்ச்சித் துறையில் அவர் நீண்ட நெடுங்காலமாக இருந்து வந்த கொள்கையை முற்றும் மாற்றி விட்டார். அதாவது பீகார் மாகாணத்தில் பேசப்படும் போஜ்புரி, மைதிலி,மாஹி முதலிய மொழிகளை இதுகாறும் ஹிந்தி மொழியைச் சேர்ந்தவை என்று கூறி வந்தார்கள். டாக்டர், இவை ஹிந்தி மொழிக் குழுவைச் சேர்ந்தவையல்ல; இவை முற்றும் வங்கம், அஸ்ஸாம், ஆகிய கிழக்கிந்திய மொழி குழுவைச் சேர்ந்தன என்று நிரூபித்தார். இவரது ஆராய்ச்சி முடிவை, மொழி இயல் ஆராய்ச்சி நிபுணர்களான கிரியர்ஸன் போன்றவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். ஆனல் ஹிந்தியை ஆட்சி மொழியாகச் செய்து விட வேண்டும் என்ற துடிப்புள்ள வடநாட்டு அரசியல்வாதிகள், பெரும் துயரம் அடைந்தார்கள். பீகார் மாநில முழுதும் ஹிந்தி பேசும் மக்கள் என்று சொல்லி வந்தது போய், ஹிந்தி தாய்மொழியாகக் கொண்டவர்கள் எண்ணிக்கை குறைந்து வருகிறதே என்று அவர்களுக்குக் கவலை!

மத்திய அரசாங்கம் நியமித்த ஆட்சிமொழி குழுவில் அங்கம் வகித்த டாக்டர் சுநீதிகுமார் சட்டர்ஜி, ஹிந்தி ஆட்சி மொழியாவதற்கு எதிராகத் தமது கருத்தினை மிக வன்மையாகத் தெரிவித்தார். ராஜாஜி, அவரது பட்சபாதமற்ற முடிவினைப் பெரிதும் பாராட்டினர்.

டாக்டர் சட்டர்ஜி உரையாடல் கலையில் தேர்ந்தவர். ஒரு நண்பர் தமது விமானத்தைப் பிடிக்க இரண்டு மணி நேரம் இருக்கிறதே, சற்று சட்டர்ஜியிடம் பேசி விட்டுப் போகலாம் என்று அவர் வீட்டுக்குப் போனுர். விமானம் போய் விட்டது. ஆனல் டாக்டர் சட்டர்ஜியிடமிருந்து விடைபெற நண்பருக்கு மனம் வரவில்லை!

அவரது நகைச்சுவைக்கு டாக்டர் சங்கர்ராஜு நாயுடு ஓர் உதாரணம் கூறினர்:

ஆங்கில வார்த்தைகளுக்குப் பொருத்தமான வார்த்தையை ஹிந்தியில் ஏற்படுத்த மத்திய அரசாங்கம் ஒரு மொழிக் குழுவை நியமித்தது. ஹிந்தியில் சரியான வார்த்தை கிடைக்காவிடின் மற்ற பாரத மொழிகளில் ஏதாகிலும் நல்ல வார்த்தை இருக்குமாளுல் சேர்த்துக் கொள்ளலாம் என்ற எண்ணத்தோடு மற்ற மொழி வல்லுனர்களையும் அக்குழுவில் சேர்த்திருந்தார்கள். அக்குழுவில் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்களும், டாக்டர் சுநீதி குமார் சட்டர்ஜியும் இருந்தார்கள். Tax என்ற வார்த்தைக்குச் சரியான ஹிந்தி வார்த்தை எது என்று தேடினுர்கள். பொதுவாக வழங்கப்படும் வார்த்தை ''கர்'' என்பது ஹிந்தியில். ஆனல் ஹிந்தியில் 'கர்'என்பதற்கு வேறு பல அர்த்தங்களும் உண்டானதால் வேறு வார்த்தை ஏதாகிலும் கிடைக்குமா என்று ஆராய்ந்தார்கள். டாக்டர் சேதுப்பிள்ளை ''தமிழில் ''வரி'' என்ற சொல் உண்டு. அதை வைத்துக் கொள்ளலாமே'' என்ருர். உடனே சட்டர்ஜி ''டாக்டர் சேதுப்பிள்ளை! தயவு செய்து எங்களைப் புதைக்காதீர்கள்—don't bury us'' என்ருர்.

குழுவினருக்கு ஒன்றும்புரியவில்லை. சட்டர்ஜி ''வங்கத்தில் 'வ' எல்லாம் 'ப' ஆகி விடும். ஆகவே உங்கள் 'வரி' அங்கே பரி (Bury) ஆகி விடும். அதனல்தான் சொன்னேன்'' என்ருர்.

எல்லா வகையிலும் பெரியவராக விளங்கிய சுநீதி குமார் சட்டர்ஜி தம் பெயரை ''நன்னெறி முருகன்'' என்று மொழி பெயர்த்துச் சொல்லிக் கொள்வார். அவர் விட்டுச் சென்ற நன்னெறியை உய்த்து உணர்ந்து மகிழ்வோம்.

— எஸ். வி. எஸ்.

# மிக நேர்த்தியானவை, உஷா மின் விசிறிகளே.



இதோ

அதற்கு சான்று.

மிக நவீன வடிவமைப்பு, தகுந்த வடிவிலான தடுப்புக் கம்பிகள், பாங்காக அமைந்த விசிறிகள், நாகரீகமான பியானோ ரக ஸ்விட்ச்கள், விளிம்புகளில் நன்கு சரிசெய்யப்பட்ட, சமமான வர்ணப் பூச்சு— இவற்றைக் கொண்டவை உஷா டேபிள் ஃபேன்
உஷா டேபிள் ஃபேன் அழகானவை; எவ்வித அலங்காரத்துக்கும் உகந்தவை; பல கண்கவர் வண்ணங்களிலானவை. உங்களை வந்தடையுமுன், கடுமையான தரக்கட்டுப்பாட்டுச் சோதனைக்கு உட்படுகின்றன.
ஆம். மிக நேர்த்தியானவை— உஷா டேபிள் ஃபேன்களே— மாதிரியிலும், செயல்பாட்டிலும் வண்ணத்திலும்.

உஷா

மேசை
விசிறிகள்

JEW-346 A

# அத்தியாயம் 23

## அருவிப் பாதை

# பார்த்திபன் கனவு

உதய சூரியனின் பொற்கிரணங்களால் கொல்லிமலைச் சாரல் அழகு பெற்று விளங்கிற்று. பாறைகள் மீதும் மரங்களின் மீதும் ஒரு பக்கத்தில் சூரிய வெளிச்சம் விழுவதும் இன்னொரு பக்கத்தில் அவற்றின் இருண்ட நிழல் நீண்டு பரந்து கிடப்பதும் ஒரு விசித்திரமான காட்சியா யிருந்தது. வானவெளியெங்கும் எண்ணற்ற பட்சிகளின் கல கல த்வனி பரவி ஒலித்தது. அதனுடன் மலையிலிருந்து துள்ளிக் குதித்து ஆடிப் பாடி வந்த அருவியின் இனிய ஒலியும் சேர்ந்து வெகு மனோகரமா யிருந்தது.

இந்த நேரத்தில் அந்த மலைச் சாரலுக்கு அருகில் இரண்டு உயர் ஜாதி வெண் புரவிகள் வந்து கொண்டிருந்தன, அவற்றின் மீது ஆரோகணித்திருந்தவர்கள் நமக்கு ஏற்கெனவே பழக்கமுள்ளவர்களான சிவனடியாரும் பொன்னனும்தான்.

அவர்கள் அந்தக் காட்டாற்றின் கரையோரமாகவே வந்து கொண்டிருந்தார்கள்; பேசிக் கொண்டு வந்தார்கள்.

சிவனடியார், சற்றுத் தூரத்தில் மொட்டையாக நின்ற பாறையைச் சுட்டிக் காட்டி, ''பொன்னா! அந்தப் பாறையைப் பார்! அதைப் பார்த்தால் உனக்கு என்ன தோன்றுகிறது?'' என்று கேட்டார்.

''ஒன்றும் தோன்றவில்லை, சுவாமி! மொட்டைப் பாறை என்று தோன்றுகிறது. அவ்வளவுதான்.''

''எனக்கு என்ன தோன்றுகிறது தெரியுமா? காலை மடித்துப் படுத்துத் தலையைத் தூக்கிக் கொண்டிருக்கும் நந்தி பகவானைப் போல் தோன்றுகிறது. இப்போது அந்தப் பாறையின் நிழலைப் பார்!''

பொன்னன் பார்த்தான். அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. ''சுவாமி நந்தி மாதிரியே இருக்கிறதே!'' என்றான்.

''சாதாரணக் கண்ணுக்கும் சிற்பியின் கண்ணுக்கும் இதுதான் வித்தியாசம். பொன்னா! சிற்பி ஒரு பாறையைப் பார்த்தானானால், அதில் ஒரு யானையையோ, சிங்கத்தையோ அல்லது ஒரு தெய்வீக வடிவத்தையோ காண்கிறான். இன்னின்ன மாதிரி வேலை செய்தால் அது அத்தகைய உருவத்தை அடையும் என்று சிற்பியின் மனத்தில் உடனே பட்டு விடுகிறது...''

பொன்னன் குறுக்கிட்டு, ''சுவாமி! தாங்கள்....'' என்றான்.

''ஆமாம், நான் ஒரு சிற்பிதான்! உலகத்தில் வேறு எந்த வேலையைக் காட்டிலும் சிற்ப வேலையிலேதான் எனக்குப் பிரியம் அதிகம்... இப்போது நான் எடுத்துக் கொண்டிருக்கும் வேலையை மட்டும் பூர்த்தி செய்து விட்டேனானால் ....இருக்கட்டும், பொன்னா! மாமல்லபுரம் நீ பார்த்திருக்கிறாயா?'' என்று சுவாமியார் கேட்டார்.

''ஒரே ஒரு தடவை பார்த்திருக்கிறேன் சுவாமி!''

''அதைப் பார்த்தபோது உனக்கு என்ன தோன்றியது?''

''சொப்பன லோகத்தில் இருப்பதாகத்தான் தோன்றியது...''

''ஆனால் அந்தச் சிற்பங்கள் உண்மையில் சொப்பனமில்லை. நாம் உயிரோடிருப்பதை விட அதிக நிஜம். கல்லிலே செதுக்கிய அச்சிற்ப வடிவங்கள் நம்முடைய காலமெல்லாம் ஆன பிறகு, எத்தனையோ காலம் அழியாமல் இருக்கப் போகின்றன; நமக்கு ஆயிரம் வருஷங்களுக்குப் பின்னால் வரும் சந்ததிகள் பார்த்து மகிழப் போகிறார்கள். ஆகா! ஒருகாலத்தில், பொன்னா! மாமல்லபுரம் மாதிரியே இந்தத் தமிழகம் முழுவதையும் ஆக்க வேண்டுமென்று நான் கனவு கண்டு கொண்டிருந்தேன்...,''

அமரர் கல்கி

''என்ன, தாங்களும் கனவு கண்டீர்களா?'' என்றான் பொன்னன்.

''ஆமாம்; உங்கள் பார்த்திப மகாராஜா மட்டும்தான் கனவு கண்டார் என்று நினைக்கிறாயா? அவர் சோழ நாட்டின் பெருமையைப் பற்றி மட்டும் கனவு கண்டார். நானோ தமிழகத்தின் பெருமையைக் குறித்துக் கனவு கண்டு கொண்டிருந்தேன். பார், பொன்னா! புண்ணிய பூமியாகிய இந்தப் பரத கண்டம், வட நாடு, தென் நாடு என்று முழுவதும் ஒரே மகாராஜ்யமாயிருக்க வேண்டும் — தமிழகத்தின் புகழ் உலகெல்லாம் பரவ வேண்டும் என்று மகேந்திர பல்லவர் ஆசைப்பட்டார்.



நானும் அம்மாதிரி கனவுதான் கண்டு கொண்டிருந்தேன். என் வாழ்நாளில் அந்தக் கனவு நிறைவேறலாம் என்று ஆசையுடன் நம்பியிருந்தேன். ஆனால், அந்த ஆகாசக் கோட்டையானது ஒரே ஒரு மனுஷனின் சுத்த வீரத்துக்கு முன்னால், இடிந்து தகர்ந்து போய் விட்டது.''

''சுவாமி! யாரைச் சொல்கிறீர்கள்?'' என்றான் பொன்னன்.

''எல்லாம் உங்கள் பார்த்திப மகாராஜாவைத்தான். ஆகா! அந்த வெண்ணாற்றங்கரைப் போர்க்களம் இப்போது கூட என் மனக் கண் முன்னால் நிற்கிறது. என்ன யுத்தம்! என்ன யுத்தம்! வெண்ணாறு அன்று இரத்த ஆறாக அல்லவா ஓடிற்று? பூரணச் சந்திரன் வெண்ணிலவைப் பொழிந்த அந்த இரவிலே, அந்தப் போர்க்களம்தான் எவ்வளவு பயங்கரமாக இருந்தது? உறையூரிலிருந்து கிளம்பி வந்த பத்தாயிரம் வீரர்களில் திரும்பிப் போய்ச் செய்தி சொல்வதற்கு ஒருவன் கூட மிஞ்சவில்லை என்றால், அந்தப் போர் எப்படி இருந்திருக்க வேண்டும் என்று பார்த்துக்கொள்!'' என்று சுவாமியார் ஆவேசத்துடன் பேசினார்.

''ஐயோ! அந்தப் பத்தாயிரம் வீரர்களில் ஒருவனாக இருக்க எனக்குக் கொடுத்து வைக்கவில்லையே!'' என்றான் பொன்னன்.

''போரில் உயிரை விடுவதற்கு வீரம் வேண்டியதுதான், பொன்னா! ஆனால், உயிரோடிருந்து உறுதி குலையாமல்

பிரிவுபட்டிருக்கிறது. கதையிலும் காவியத்திலும் இதிகாசத்திலும் வடநாடுதான் ஆதிகாலத்திலிருந்து பெயர் பெற்று விளங்குகிறது. வட நாட்டு மன்னர்களின் பெயர்கள்தான் பிரசித்தி யடைந்திருக்கின்றன. பாடலிபுரத்துச் சந்திரகுப்தன் என்ன, அசோக சக்கரவர்த்தி என்ன, விக்கிரமாதித்யன் என்ன! இவர்களுக்குச் சமமாகப் புகழ் பெற்ற தென்னாட்டு ராஜா யார் இருந்திருக்கிறார்கள்? நம்முடைய காலத்திலேதான், வட நாட்டு ஹர்ஷ சக்கரவர்த்தியின் புகழ் உலகெல்லாம் பரவியிருப்பது போல், மகேந்திர பல்லவரின் புகழ் பரவியிருந்தது என்று சொல்ல முடியுமா? தென்னாடு இவ்விதம் பின்னடைந்திருப்பதின் காரணம் என்ன? இந்தத் தென்னாடானது ஆதி காலம் முதல், சோழநாடு, சேர நாடு, பாண்டிய நாடு என்று பிரிந்து கிடந்ததுதான் காரணம். பெரிய இராஜ்யம் இல்லாவிட்டால், பெரிய காரியங்களைச் சாதிக்க முடியாது. பெரிய காரியங்களைச் சாதிக்காமல் பெரிய புகழ் பெறவும் முடியாது. வடநாட்டில் ஹர்ஷ சக்கரவர்த்தியின் இராஜ்யமானது நீளத்திலும் அகலத்திலும் இருநூறு காத தூரம் உள்ளதாயிருக்கிறது. இந்தத் தென்னாட்டிலோ பத்து காதம் போவதற்குள்ளாக மூன்று ராஜ்யத்தை நாம் தாண்ட வேண்டியதாயிருக்கிறது. இந்த நிலைமை உதவாது — தமிழகம்

இருப்பதற்கு அதைக் காட்டிலும் அதிக தீரம் வேண்டும். அந்தத் தீரம் உன்னிடம் இருக்கிறது: உன்னைக் காட்டிலும் அதிகமாக வள்ளியிடம் இருக்கிறது! நீங்களும் பாக்கிய சாலிகள்தான்!'' என்றார் சுவாமியார்.

''சுவாமி! வெண்ணாற்றங்கரைப் போரைப்பற்றி இன்னும் சொல்லுங்கள்!'' என்றான் பொன்னன்.

அந்த வீரப் போரைக் குறித்தும், பார்த்திப மகாராஜா அந்திய காலத்தில் சிவனடியாரிடம் கேட்ட வரத்தைப் பற்றியும் எவ்வளவு தடவை கேட்டாலும் அவனுக்கு அலுப்பதில்லை.



சிவனடியாரும் அதைச் சொல்ல அலுப்பதில்லை யாதலால், அந்தக் கதையை மறுபடியும் விவரமாகச் சொல்லிக் கொண்டு வந்தார்.

சற்று நேரத்துக்கெல்லாம் அவர்கள், காட்டாறானது சிற்றருவியாகி மலைமேல் ஏறத் தொடங்கியிருந்த இடத்துக்கு வந்து சேர்ந்து விட்டார்கள். இதற்கு மேல் குதிரைகளின் மேல் போவது இயலாத காரியம். எனவே, மலைச்சாரலில் மரங்கள் அடர்த்தியா யிருந்த ஓர் இடத்தில் குதிரைகளை அவர்கள் விட்டார்கள். அவற்றை ''மரத்திலே கட்ட வேண்டாமா?'' என்று பொன்னன் கேட்டதற்கு, ''வேண்டாம்'' என்றார் சிவனடியார்.

''இந்த உயர்ந்த ஜாதிக் குதிரைகளின் அறிவுக்கூர்மை அநேக மனிதர்களுக்குக்கூட வராது பொன்னா! உங்கள் இளவரசன் ஆற்று வெள்ளத்தில் போனதும் உனக்கு முன்னால் இந்தப் புஷ்பகம் வந்து எனக்குச் செய்தி சொல்லிவிடவில்லையா? இவ்விடத்தில் நாம் இக் குதிரைகளை விட்டுவிட்டுப் போனோமானால்,



பம்பாயிலிருந்து சற்றுத் தள்ளி ''சாகர் சாம்ராட்'' கடல் படுகையைக் குடைந்து எண்ணெய் எடுத்து வருகிறது.

இதேபோல் பிரிட்டனிலும் வடக்குக் கடலில் எண்ணெய் எடுத்து வருகிறார்கள்.

இப்படி எண்ணெய் எடுக்கும்போது எதிர்பாராத விதமாக எண்ணெய் கடலில் சிந்துவதுண்டு. அப்படியொரு விபத்து வடக்குக் கடலில் அண்மையில் ஏற்பட்டது. ஒரு நாளைக்கு சுமார் மூவாயிரம் டன் எண்ணெய், குழாய்கள் வழியாகப் பயணப்படுவதற்குப் பதில் கடலில் சிந்திக் கொண்டிருந்தது. இவ்விதம் சிந்தும்போது கடல் வாழ் ஜீவராசிகளுக்கும் கடலை நம்பி வாழும் பறவைகளுக்கும் சொல்லி முடியாத தொந்தரவு. அதிகமாகப் பாதிக்கப்படுபவை கடல் பறவைகள்தாம். அடுத்து மீன்கள். இப்போது வாழும் மீன்கள் ஒரு வேளை தப்பி விடலாம். ஆனால் அவற்றின் முட்டைகள் அழியும். எதிர்காலத்தில் மீன் வளம் குறையும்.

கடல் படுகையிலிருந்து எண்ணெய் எடுக்கும் போது அஜாக்கிரதையாக இருந்தால் ஜீவராசிகளுக்கு ஏற்படும் துன்பத்தைக் ''கார்டியன்'' பத்திரிகை மேற்கண்டவாறு கார்ட்டூன் படம் போட்டுக் காட்டியுள்ளது.

பம்பாயை ஒட்டி கடல் படுகையைக் குடைந்து எண்ணெய் எடுக்கும் நாமும் இதனைக் கவனத்தில் கொண்டு எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்தானே?

---

அந்தண்டை இந்தண்டை அவை அசைய மாட்டா. கட்டிப் போட்டால் தான் ஆபத்து. துஷ்ட மிருகங்கள் ஒருவேளை வந்தால் ஓடித் தப்ப முடியாதல்லவா?'' என்று கூறிவிட்டு இரண்டு குதிரைகளையும் முதுகில் தடவிக் கொடுத்தார். பிறகு இருவரும் அருவி வழியைப் பிடித்துக் கொண்டு மலை மேலே ஏறினார்கள்.

பெரிதும் சிறிதுமாயும், முண்டும் முரடுமாயும் கிடந்த கற் பாறைகளை வெகு லாவகமாகத் தாண்டிக்கொண்டு சிவனடியார் சென்றார். தண்ணீரில் இறங்கி நடப்பதிலாவது, பாசி படர்ந்து வழுக்கிய பாறையில் ஏறுவதிலாவது, ஒரு பாறையிலிருந்து இன்னொரு பாறைக்குத் தாண்டுவதிலாவது அவருக்கு ஒரு விதமான சிரமமும் இருக்கவில்லை. அவரைப் பின்தொடர்ந்து போவதற்குப் பொன்னன் திணற வேண்டியதாக இருந்தது.

''சுவாமி! தங்களுக்குத் தெரியாத வித்தை இந்த உலகத்தில் ஏதாவது உண்டா?'' என்று பொன்னன் கேட்டான்.

''ஒன்றே ஒன்று உண்டு, பொன்னா! கொடுத்த வாக்கை நிறைவேற்றாமல் இருப்பது என்னால் முடியாத காரியம்'' என்றார் சிவனடியார்.

அவர் கூறியதைப் பொன்னன் சரியாகத் தெரிந்து கொள்வதற்குள், ''ஆமாம், உங்கள் பார்த்திப மகாராஜாவுக்கு நான் கொடுத்த வாக்கினால் என் வாழ்க்கை மனோரதமே எப்படிக் குட்டிச் சுவராய்ப் போய்விட்டது பார்!'' என்றார்.

''அதெப்படி சுவாமி! முன்னேயும் அவ்விதம் சொன்னீர்கள்! பார்த்திப மகாராஜாவினால் உங்களுடைய காரியம் கெட்டுப் போவானேன்?'' என்று கேட்டான் பொன்னன்.

''வாதாபியிலிருந்து திரும்பி வந்த போது, தென்னாடு முழுவதையும் ஒரு பெரிய மகாராஜ்யமாக்கிவிட வேண்டுமென்ற எண்ணத்துடனேயே வந்தேன். இந்தச் சின்னஞ் சிறு தமிழகத்தில் ஒரு ராஜாவுக்கு மேல் — ஓர் இராஜ்யத்துக்கு மேல் இடம் கிடையாது என்று கருதினேன். சோழ சேர பாண்டியர்களின் நாமதேயமே இல்லாமல் பூண்டோடு நாசம் செய்து விட்டுத் தமிழகத்தில் பல்லவ இராஜ்யத்தை ஏக மகாராஜ்யமாகச் செய்துவிட வேண்டுமென்று சங்கல்பம் செய்து கொண்டிருந்தேன். ஆனால் என்ன பிரயோஜனம்? பார்த்திபனுடைய சுத்த வீரமானது, என் சங்கல்பத்தை அடித்துத் தள்ளி விட்டது. அவனுடைய மகனைக் காப்பாற்றி வளர்க்க — சுதந்திர வீர புருஷனாக வளர்க்க — வாக்குக் கொடுத்து விட்டேன். சுதந்திர சோழ இராஜ்யத்தை ஸ்தாபிப்பதற்கு நானே முயற்சி செய்ய வேண்டியதாகிவிட்டது. அதுவே கவலையாகவும், வேலையாகவும் போய்விட்டது. இப்போது நினைத்தால் ஏன் அந்தப் புரட்டாசிப் பௌர்ணமி இரவில் போர்க்களத்தில் பிரவேசித்துப் பார்த்திபனுடைய உடலைத் தேடினோம்

# மலரும் பூவெனப் பிள்ளை வளர்ந்திடப் பலமான துணை—

# இன்க்ரிமின்*




டிராப்ஸ்: 2 மாதங்கள் முதல் 2 வயது வரையில்
ஸிரப்: 14 வயது வரையில்

இளமைப் பருவம்—பூவாய் மலரும் நாட்கள்—மலர்ந்து சிரித்து உங்கள் மனதை அள்ளி வளரும் பருவம்...இப் பருவத்தில் அவளுக்குக் கட்டாயம் தேவை—இன்க்ரிமின். பின்னர் பாருங்களேன் அவள் வளர்ச்சியை! பசித்துப் புசிப்பாள் ...உண்ணும் உணவெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக மாறும். நலம் தரும் வைட்டமின்கள், இரும்புச் சத்து, இவற்றோடு உங்கள் மகளின் வளர்ச்சிக்கு மிக மிக அத்தியாவசியமான அமினோ அமிலம், லைஸின் யாவும் நிறைந்தது இன்க்ரிமின்.

## இன்க்ரிமின்* டானிக்

**உணவையெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக்கும்**
**உங்கள் பிள்ளை பூவாய் மலர்ந்து சிரிக்கும்!**

Lederle தயாரிப்பு * அமெரிக்கன் ஸயனமிட் கம்பெனியின் ரெஜிஸ்டர்டு டிரேடுமார்க்

Sista's-INC-829 J/77 Tam

என்று தோன்றுகிறது. இதைத்தான் விதி என்று சொல்கிறார்கள் போலிருக்கிறது.''

இவ்விதம் பேசிக் கொண்டே பொன்னனும் சிவனடியாரும் மேலே மேலே ஏறிச் சென்றார்கள். சூரியன் உச்சி வானத்தை அடைந்தபோது செங்குத்தான பாறையிலிருந்து அருவி 'ஹோ' என்ற இரைச்சலுடன் விழுந்து கொண்டிருந்த இடத்தை அவர்கள் அடைந்தார்கள். அதற்குமேல் அருவிப் பாதையில் போவதற்கு வழியில்லை என்பதைப் பொன்னன் தெரிவிக்க, சிவனடியார் சிந்தனையில் ஆழ்ந்தவராய், அங்குமிங்கும் பார்க்கத் தொடங்கினார்.

அருவி விழுந்தோடிய இடத்துக்கு இருபுறமும் கூர்ந்து பார்த்ததில் காட்டு வழி என்று சொல்லக் கூடியதாக ஒன்றும் தென்படவில்லை. இருபுறமும் செங்குத்தாகவும், முண்டும் முரடுமாகவும் மலைப் பாறைகள் உயர்ந்திருந்ததுடன் முட் செடிகளும், கொடிகளும் நெருங்கி வளர்ந்து படர்ந்திருந்தன. அந்தச் செடிகொடிகளையெல்லாம் சிவனடியார் ஆங்காங்கு விலக்கிப் பார்த்துக் கொண்டு கடைசியாக அருவி விழுந்து கொண்டிருந்த இடத்துக்குச் சமீபமாக வந்தார். அருவியின் தாரை விழுந்த இடம் ஒரு சிறு குளம்போல் இருந்தது. அந்தக் குளத்தின் ஆழம் எவ்வளவு இருக்குமோ தெரியாது. தாரை விழுந்த வேகத்தினால் அலை மோதிக் கொண்டிருந்த அந்தக் குளத்தைப் பார்க்கும் போதே மனத்தில் திகில் உண்டாயிற்று. குளத்தின் இருபுறத்திலும் பாறைச் சுவர் செங்குத்தாக இருந்தபடியால் நீர்த் தாரை விழும் இடத்துக்கு அருகில் போவது அசாத்தியம் என்று தோன்றிற்று. ஆனால் சிவனடியார் அந்த அசாத்தியமான காரியத்தைச் செய்யத் தொடங்கினார்.

அந்த அருவிக் குளத்தின் ஒரு பக்கத்தின் ஓரமாகப் பாறைச் சுவரைக் கைகளால் பிடித்துக்கொண்டும் முண்டு முரடுகளில் காலை வைத்துத் தாண்டியும், சில இடங்களில் தண்ணீரில் இறங்கி நடந்தும், சில இடங்களில் நீந்தியும் அவர் போனார். இதைப் பார்த்துப் பிரமித்துப் போய் நின்ற பொன்னன், கடைசியாகச் சிவனடியார் தண்ணீர்த் தாரைக்குப் பின்னால் மறைந்ததும், ''ஐயோ!'' என்று அலறி விட்டான். ''ஒருவேளை போனவர் போனவர்தானா? இனிமேல் திரும்ப மாட்டாரோ?'' என்று அவன் அளவில்லாத ஏக்கத்துடனும் திகிலுடனும் நின்றான். நேரமாக ஆக அவனுடைய தவிப்பு அதிகமாயிற்று. சுவாமியாருக்கு ஏதாவது நேர்ந்து விட்டால் என்னென்ன விபரீதங்கள் விளையும் என்பதை நினைத்த போது அவனுக்குத் தலை சுற்றத் தொடங்கியது. ''அவரை விட்டு விட்டு நாம் திரும்பிப் போவதா? முடியாத காரியம். நாமும் அவர் போன இடத்துக்கே போய்ப் பிராணனை விடலாம், எது எப்படிப் போனாலும் போகட்டும்'' என்று துணிந்து பொன்னனும் அந்தக் கிடுகிடு பள்ளமான குளத்தில் இறங்கினான்.

(தொடரும்)





## குணசித்திர இன்னிசை விருந்து!

தஞ்சை கல்யாணசுந்தரம் சம்பூர்ண ராமாயணக் கதையை - 'குணசித்திர இன்னிசை விருந்து' என்ற நூதனமான தலைப்பில் நிகழ்த்தி வருகிறார். தஞ்சை ஸ்ரீமதி சரஸ்வதி ஸ்ரீநிவாசன் அவருடன் மேடையில் அமர்ந்து பாடுகிறார். இருவரும் ராமாயணக் கதா பாத்திரங்களை மாறி மாறி ஏற்று மேடையைக் கலகலப்பாக்குகின்றனர். இருவருமே அருமையாகப் பாடுகின்றனர். வயலின், மிருதங்கம், ஹார்மோனியம் ஆகியவை பொருத்தமாக அமைந்திருக்கின்றன. வெறும் கதாகாலட்சேபமாக இல்லாமல் நாடகம் பார்ப்பது போல் இருக்கிறது.

நிகழ்ச்சி, வசனமும் பாட்டுமாக மிகவும் சுவாரஸ்யமாயிருக்கிறது.

தஞ்சை கல்யாணசுந்தரம் கூனியை அப்படியே மேடைக்குக் கொண்டு வந்துவிட்டார். வயோதிகத் திரைால் நடுங்கும் குரலுக்கு இடையில் கைகேயியின் இளங் குரலையும் பேச்சில் காட்டினார். அதே சமயத்தில் ராமனையும், லக்ஷ்மணனையும், சீதாதேவியையும் ஸ்ரீமதி சரஸ்வதி ஸ்ரீநிவாசன் அற்புதமாகப் பேச வைத்தார்.

இந்தச் சுவையான நிகழ்ச்சியில் அருணாசலக் கவிராயரின் ராமநாமக் கீர்த்தனைகள் பெரும் அளவுக்குப் பாடப்படுகின்றன. திரு கல்யாணசுந்தரம் தாமே சில பாடல்களை இயற்றியும் சந்தர்ப்பங்களுக்கு ஏற்றவாறு பாடுகிறார்.

நல்ல கலை நிகழ்ச்சிகளுக்கு ஆதரவு தரத் தயங்காத சபாக்கள் இந்த இன்னிசைக் கலை நிகழ்ச்சியை நினைவில் கொள்ளலாம்.

-காந்தன்.

# இதோ! நீங்கள் துடிதுடிப்புடனும், ஊக்கத்துடனும் விளங்க சக்தியளிக்கும் எரிபொருள்..




# பூஸ்ட்

## மால்ட் சாக்லெட் மில்க் ட்ரிங்க்

ரயிலைப் போனறே ஒவ்வொரு நாளும் உங்களுக்கும் நல்ல துவக்கத்திறகு எரிபொருள் தேவை. ஆகையினால் தான் ஒவ்வொரு காலையும் உங்களுக்கு பூஸ்ட தேவை

உயர் சுறுசுறுப்புடன் உங்களை இயங்கச் செய்யும் சக்திப் பொருள். வேலையிலும் விளையாட்டிலும் அதிகச் சக்தியைச் செலவிடும் உங்கள் குழந்தைகளுக்கு இது முக்கியமாகத் தேவை.

அவர்களுக்கு பூஸ்ட்-மால்ட் சாக்லேட் பால் பானமளியுங்கள். ஊட்டத்தைப் பற்றி குறைவற அறிந்த ஹார்லிக்ஸ் செய்வோர் தருவது

சக்தி வள மான ஏடு நிறைந்த பூஸ்ட் உங்களுக்கு அதிகப் படியான ஊட்டமளிக்கிறது.

ஆடை நிறைந்த பால், கோதுமை, பார்லி மால்ட், கோக்கோ ஆகியவற்றினால் செய்யப் பட்டிருப்பதே இதற்குக் காரணம்.

பூஸ்டின் ஆடை நிறைந்த மால்ட் சாக்லேட் சுவையை உங்கள் குடும்பத்தினர் மிகவும் விரும்புவார்கள்.

பூஸ்ட், ஒரு நாளைத் துவக்குவதற்கு மிகச் சிறப்பான முறை—ஒவ்வொரு நாளும

இரண்டு அளவுகளில் கிடைக்கும்.

**'ஹார்லிக்ஸ்' தயாரிப்பாளர்கள் அளிப்பது**

மாயாவி

## 5. யார் அந்தப் பெண்?

மோகன் எழுந்து படுக்கையைச் சுருட்டி வைத்து விட்டு, பல் தேய்ப்பதற்காக வீட்டுப் பின்கட்டுக்குச் சென்றான். தன் கனவு கலைக்கப் பட்டு விட்ட ஏமாற்றத்தை எண்ணி ஆதங்கப் பட்டுக் கொண்டு அவன் இனியும் படுக்கையில் உட்கார்ந்திருந்தால், ''என்டா டேய்! எழுந்திருக்கலே?'' என்று வெற்றிலையைக் குதப்பிய வாயுடன் அவன் அப்பாவும், ''மோகனு! என்னடா கண்ணு ஒடம்புக்கு?'' என்று அவன் அம்மாவும் அந்த அறைக்கே படையெடுத்து வந்து விடுவார்கள்.

அன்றியும் இது அவனே செய்து கொண்டிருந்த ஓர் ஏற்பாடு. எப்பொழுது வேலவூருக்கு வந்தாலும் சரி, அங்கிருந்து சென்னை திரும்பும் நாள் ஞாயிற்றுக் கிழமையாக இல்லாவிட்டால், எந்த ராஜா எங்கே போனாலும், காலை நான்கு மணிக்கெல்லாம் அலாரம் வைத்து எழுந்து, பல் தேய்த்து, காப்பி சாப்பிட்டு விட்டு நாலரை மணிக்குள் புறப்பட்டு விடுவான். வேலவூரிலிருந்து சென்னைக்குக் கிட்டத்தட்ட நூறு கிலோமீட்டர் தூரம். காரில் இரண்டு மணி நேரப் பிரயாணம். காலையில் நாலரை மணிக்குப் புறப்பட்டால் ஆறரை மணி வாக்கில் சென்னை வந்து சேர்ந்து விடுவான். அடுத்த ஒரு மணி நேரத்துக்குள் குளித்து, டிஃபன் சாப்பிட்டு விட்டு வேலை ஸ்தலத்துக்குப் புறப்படுவதற்குச் சரியாக இருக்கும்.

ஊருக்கு வந்து திரும்பும் நாட்களில், ஒருகால் அலாரம் அடித்துத் தூக்கம் கலையாதிருந்தால், தன்னை எழுப்பிவிட்டு விடுமாறு அவனே தான் தன் பெற்றோரிடம் சொல்லி ஏற்பாடு செய்திருந்தான். அந்தக் கடமையைத்தான் அவன் தாயும் தந்தையும் அப்பொழுது நிறைவேற்றினர். எனவே, தன் இன்பக் கனவு கலைக்கப்பட்டதால் அலுப்பும் சலிப்பும் ஏற்பட்ட போதிலும், அதையெல்லாம் ஒரு பக்கம் ஒதுக்கி விட்டு, அவன் சென்னைக்குப் புறப்படுவதற்கு ஆயத்தமானான்.

அடுத்த அரை மணியில் அவனுடைய அம்பாசடர் கார், தேசிய நெடுஞ்சாலையில் ஒளி வெள்ளத்தைப் பரப்பியபடி சென்னையை நோக்கிப் பறந்து கொண்டிருந்தது. ரோட்டில் கண்களும், ஸ்டீரிங்கில் கைகளுமாகக் காரைச் செலுத்திக் கொண்டிருந்த மோகனின் உதடுகள் திடீரென ஏதையோ நினைத்து முறுவலித்தன.

ஆம்; அவன் கனவு கலைக்கப்பட்டதேயன்றி நினைவு கலைக்கப்படவில்லை. அந்த நினைவை அவனுடைய ஜெயா தான் எப்பொழுதும் நிறைத்திருந்தாள். ஓய்வாக இருக்கும் போதெல்லாம் அவளைப்பற்றி நினைப்பதில் அவன் ஒரு தனி இன்பம் கண்டான். ஓய்வாக இருக்கும் போது மட்டும் இல்லை; அவர்கள் நெருங்கிப் பழகத் தொடங்கிய பிறகு எத்தனையோ இரவுகளில் அவன் தூக்கத்தைக் கலைத்துக் கொண்டுகூட அவளைப் பற்றிய நினைவுகளில் மூழ்கிப் போயிருக்கிறான். தங்களிடையே நிகழ்ந்த சந்திப்புக்கள் ஒவ்வொன்றையும் நினைவுக்குக் கொண்டு வந்து, அப்பொழுது தாங்கள் பேசிக் கொண்டது அனைத்தையும் வார்த்தைக்கு வார்த்தை நினைத்துப் பார்த்து மகிழ்வான். எத்தனை தடவை அந்தச் சந்திப்புக்களை மீண்டும் மீண்டும் நினைத்துப் பார்த்தாலும் அவனுக்கு அலுக்காது.

இன்றும் அப்படித்தான் காரை ஓட்டிக் கொண்டே அந்தச் சந்திப்புக்களையும் சம்பாஷணைகளையும் நினைத்துப் பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்தான். . கடைசியாகத் தங்கள் இருவர் மட்டும் தனியாக - வேலூருக்குப் போன சம்பவத்தில் அவன் நினைவு லயித்த போது கார் தாம்பரத்தைத் தாண்டிவிட்டது.

இதோ, இந்த ஃப்ரண்ட் ஸீட்டில்தான் அவனதுஇடப்புறம் அமர்ந்திருந்தாள் ஜெயா. நகர எல்லையைக் கடக்கும் வரையில் அவர்கள் பேசிக் கொள்ளவில்லை.

பட்டுப் போன்ற ஜெயாவின் கரம், பட்டதும் சில்லிட்டுப் போன மோகனின் கரம் தடுமாறியது. வண்டி இங்கும் அங்கும் நெளியவே தன்னிச்சையாக அவன் வலது கால் ஆக்ஸிலேட்டரிலிருந்து பிரேக்குக்குத் தாவி அதைப் பலமாக அழுத்தியது. வண்டியின் ரப்பர் சக்கரங்கள் கிறீச்சிட்டன!

மோகனின் நினைவு கலைந்தது.

ஆ! என்ன அது சாலையோரம்?

ஆம்! அங்கே ஓர் இளம் பெண் அலங்கோலமாக விழுந்து கிடந்தாள்.

அந்தப் பெண் ஆக்ஸிடெண்டுக்கு உள்ளாகி யிருக்க வேண்டும்? காரோ லாரியோ அவளை மோதித் தள்ளிவிட்டுச் சென்றிருக்க வேண்டும் என்று மோகன் நினைத்தான்.

எனவே, காரை நிறுத்திய போதிலும், இறங்கிப்போய் அவளைப் பார்ப்பதா வேண்டாமா என்ற தயக்கம் அவனுக்கு ஏற்பட்டது. யார் என்று பார்க்கப் போய், அவள்மீது காரை மோதிவிட்ட பழி அவன் மேல் விழுந்து விடக் கூடாதே!

அவன் வண்டியிலிருந்து இறங்காமலேயே அவளைச் சிறிது கூர்மையாக நோக்கினான். அவளுடைய உடம்பிலோ, ஆடைகளிலோ ரத்தக்கறை ஏதும் காணப்படவில்லை. ஆயினும் ஒருகால் ஊமைக் காயம் பட்டுக்கூட உயிர் பிரிந்திருப்பதும் சாத்தியந்தானே!

சே! அவள் உயிரிழந்து விட்டாள் என்று எப்படி நினைப்பது? ஏன் வெறும் மயக்கத்தினால் இப்படி விழுந்து கிடக்கக் கூடாது?

எதாக இருந்தாலும், காரை நிறுத்தி இவ்வளவு அருகே வந்துவிட்ட பிறகு என்ன ஏது என்று தெரிந்து கொள்ளாமல் திரும்ப அவன் மனம் இடம் கொடுக்கவில்லை. எந்தப் பாவி இப்படி மோதித் தள்ளி விட்டுப் போனானோ? எப்பொழுது அந்த விபத்து நடந்ததோ? ஒருவேளை அவளுக்கு உடனடி சிகிச்சை ஏதாவது தேவையாக இருந்தால்?

தனக்கு ஏற்படக்கூடிய அபாயத்தைப் பற்றிய பயத்தைவிட மனிதாபிமானந்தான் அப்பொழுது மோகனிடம் மேலோங்கிற்று. வந்தது வரட்டும் என்று காரிலிருந்து இறங்கி, அந்தப் பெண்ணின் அருகே சென்று பார்த்தான்.

அவள் உடலில் காயம் எதையும் காணவில்லை. ஆயினும் உயிர் இருக்கிறதா என்பதைத் தெரிந்து கொள்ள எண்ணி நிமிர்ந்து படுத்துக் கிடந்த அவள் மூக்கருகே கையை நீட்டிப் பார்த்தான். மூச்சு வந்து கொண்டிருந்தது! அப்பாடி! இப்பொழுதுதான் அவனுக்கும் சரியாக மூச்சு வந்தது! அப்படியானால் அவளுக்கு மயக்கந்தான்!

வேறு எதையும் சிந்திப்பதற்கு முன் அவன் அந்தப் பெண்ணை ஒருதடவை கால் முதல் தலைவரையில் அளவெடுத்தான். அவளுக்கு இருபது வயசுக்கு உள்ளாகவே இருக்கும் என்று தோன்றியது. இளமையோடு அழகும் அவளைப் போர்த்தியிருந்தது. எளிய ஆடைகளையே தரித்திருந்தாள். கைகளில் சில கண்ணாடி வளையல்களையும், காதுகளில் மலிவான வளையங்களையும் அன்றி வேறு எந்தவிதமான ஆபரணமும் அவளிடம் காணப்படவில்லை. ஒருகால் ஏழைக் குடும்பத்தவளாக இருக்கலாம். மோகன் அவள் கழுத்தையும், கால் விரல்களையும் உற்றுப் பார்த்தான். மஞ்சள் சரடோ, மெட்டியோ தென்படவில்லை. ஆகவே, அவள் திருமணம் ஆகாதவள். இங்கே எதற்காக வந்தாளோ? எப்பொழுது வந்தாளோ? ஏன் மயக்கமுற்றாளோ? ''அம்மா! அம்மா!'' என்று அவளைக் கூப்பிட்டுப் பார்த்தான். பதில் இல்லை.

'நமக்கேன் வம்பு? பேசாமல் திரும்பிப்போய் விடலாமா?' என்று முதலில் நினைத்தான். ஆனால் அவனுடைய இளகிய மனசு அதற்கு ஒப்பவில்லை. சட்டென ஒரு முடிவுக்கு வந்தான். அவன் வசித்து வந்த மாம்பலம் போக் ரோட்டிலேயே அவனுடைய பங்களாவுக்குச் சிறிது தள்ளி டாக்டர் தேவசகாயம் என்று ஒருவர் சகாயமாதா நர்ஸிங்ஹோம் என்ற பெயரில் நர்ஸிங் ஹோம் நடத்தி வந்தார். அவர் அவனுடைய நெருங்கிய நண்பர். இந்தப் பெண்ணை அவருடைய நர்ஸிங்ஹோமில் கொண்டு சேர்த்துவிட்டு மாம்பலம் போலீஸ் ஸ்டேஷனுக்கும் போய் எல்லாவற்றையும் எழுதி வைத்து விடுவது.

இந்த முடிவுடன் அவன் காரின் பின் ஸீட்டின் கதவைத் திறந்து அப்பெண்ணை ஒரு குழந்தையைத் தூக்குவது போல் இரு கைகளிலும் தூக்கிப் பின் ஸீட்டில் கிடத்தினான். கதவை மூடிக் காரை ஸ்டார்ட் செய்து நேரே தியாகராயநகரை நோக்கிச் செலுத்தினான்.

அவன் பங்களா வடக்கு போக் ரோட்டில் இருந்தது. ஊரிலிருந்து வரும்போதெல்லாம் அவன் அண்ணாசாலையில் தேனாம்பேட்டை வரையில் வந்து, தியாகராய ரோட்டில் திரும்பி, பிறகு வடக்கு போக் ரோட்டில் நுழைவான். இன்றும் அவ்வழியாகத்தான் வந்தான். இவ்வழியாக வரும்போது அவன் பங்களாவைக் கடந்துதான் தேவசகாயத்தின் நர்ஸிங்ஹோமுக்குப் போக வேண்டும்.

இதற்குள் பொழுது விடிந்து விட்டது. வீட்டு வாசலில் கோலம் போடுவதற்காக வீதிக்கு வந்த மோகனின் அத்தை பொன்னம்மாள் அவன் கார் வருவதைக் கண்டதும் சற்று ஒதுங்கி நின்றாள். மோகன் அவள் நிற்பதைப் பார்த்து விட்டான். அவன் நேரே நர்ஸிங் ஹோமுக்குப் போவதாகத்தான் இருந்தான். ஆனால் இப்போது அத்தை தன்னை வரவேற்கத் தயாராக வாசலில் நின்றதால் அவளிடம் ஒரு வார்த்தை சொல்லிவிட்டுப் போகலாமென்று காரைப் பங்களா வாசலில் நிறுத்தி, ''அத்தை இப்படி வாங்க'' என்று அழைத்தான்.

''என்ன மோகன், ஊரிலிருந்து சாமான் ஏதாவது அனுப்பியிருக்காங்களா அண்ணி?'' என்று கேட்டபடி காரை நெருங்கிய பொன்னம்மாள் பின் ஸீட்டில் ஒரு பெண் படுத்திருப்பதைக் கண்டதும், ''இதென்னடா கூத்து? யாருடா இவ?'' என்று கையைத் தட்டிக் கன்னத்தில் வைத்துக் கொண்டு வியந்து நின்றாள்.

''ஸ்! இரைஞ்சு பேசாதீங்க அத்தை'' என்று அவன் முதலில் அவளை அடக்கினான். ஆம்; பொன்னம்மாள் இரகசியம் பேசினாலே இரண்டு வீடுகளுக்குக் கேட்கும்.

''யாருன்னு தெரியலே அத்தை. பல்லாவரம் தாண்டி நான் வந்துகிட்டிருந்த போது



ரோட்டோரம் மயக்கமா விழுந்து கிடந்தா. தூக்கிக் காரிலே போட்டுக் கொண்டு வந்தேன்.''

''நல்லா இருக்குது போ. ஆமாம், இப்போ என்ன செய்யப் போறே இவளை?''

''டாக்டர் தேவசகாயத்தின் நர்ஸிங் ஹோமுக்குக் கொண்டு போகப் போறேன். என்ன உடம்போ? எதனாலே ரோட்டிலே வந்து விழுந்து, மயக்கம் அடைஞ்சாளோ? ஒண்ணும் தெரியலே. டாக்டரை விட்டுப் பார்க்கச் சொல்லி விட்டுப் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய்த் தகவல் கொடுக்கப் போறேன்.''

''ஐயய்யோ! வேண்டாம் சார்!'' என்று அப்போது மூன்றாவது குரல் ஒன்று பதறியது.

மோகனும் பொன்னம்மாளும் திடுக்கிட்டுத் திரும்பினர். அந்தப் பெண் மயக்கம் நீங்கிக் காரின் பின் ஸீட்டில் எழுந்து உட்கார்ந்திருந்தாள்.

## 6. கண்ணற்ற கபோதி

மோகனுக்கு மட்டுமல்ல, பொன்னம்மாளுக்கும் அந்தப் பெண் நினைவு பெற்று விட்டது அளவற்ற நிம்மதியை அளித்தது.

''ஏம்மா பொண்ணு, நீ யாரு? ஒனக்கு என்ன?'' என்று பொன்னம்மாள் அந்தப் பெண்ணை உற்று நோக்கியபடி, கேட்டாள்.

''நான் ஓர் அநாதைங்க. எனக்கு ஒண்ணும் இல்லே'' என்று அந்தப் பெண் முனகுவது போல் சொன்னாள்.

''ஒண்ணும் இல்லாமலா பல்லாவரத்துக்குப் பக்கத்திலே ரோட்டோரம் மயங்கிக் கிடந்தே? என் மருமகன் பார்த்து, ஒன்னைக் காரிலே தூக்கிப் போட்டுக்கிட்டு டாக்டர் கிட்டே காட்டலாம்னு கொண்டு வந்திருக்கானே!''

அந்தப் பெண் பதில் சொல்லாமல் சோகமாக முறுவலித்தாள்.

''என்னம்மா, பதிலையே காணோம்?''

அவள் தன் துக்கத்தை அடக்க முயலுவது போல் உதட்டைக் கடித்துக் கொண்டாள். பிறகு, ''ஒங்க மருமகனா இவங்க?'' என்று முன்போலவே முனகும் குரலில் கேட்டாள்.

''ஆமா, ஆனா, மருமகன்னா மகளைக் கட்டிக் கொடுத்தவன் இல்லே. எங்கண்ணன் மகன்.''

''இது எந்த இடம்மா?''

''மெட்ராஸ்தான்; தியாகராயநகர். இது எங்க பங்களா, வாடகை பங்களாதான்.



என் மருமகனும் நானும்தான் இங்கே இருக்கோம். என் அண்ணனும் அண்ணியும் திண்டிவனத்துக்குப் பக்கத்திலே வேலவனூரிலே இருக்காங்க. அதான் அவங்க சொந்த ஊரு. எங்க அண்ணன் வேலவனூரிலே பெரிய பணக்காரர். என் மருமகனுக்கு இன்னும் கல்யாணம் நடக்கலே. அதனாலே, நான் அவனுக்குச் சமையல் செய்து போட்டுக்கிட்டு அவன் கூடவே இருக்கேன். என் மருமகன் பெரிய இன்சினியரு. கண்டிராக்கட்டுத் தொழில் செய்யறான். லட்சம் லட்சமா....''

''அத்தே!'' மோகன் பொன்னம்மாளை இடைமறித்தான். ''அவங்க நம்ப சரித்திரத்தைக் கேட்கலே; இது எந்த இடம்னு தான் கேட்டாங்க. தவிர, இப்போ அவங்க யாரு — என்ன என்கிறதை நாம்ப தெரிஞ்சக்கணுமா, நம்ப பூர்வோத்திரத்தையெல்லாம் அவங்க தெரிஞ்சுக்கணுமா?''

''சொன்னதினாலே என்னடா தப்பு, மோகன்? நாம்ப நம்பளைப் பத்திச் சொன்னா அவள் தன்னைப் பத்திச் சொல்லுவா?''

''ஓங்க மருமகன் பேரு மோகனா, அம்மா?'' என்று அந்தப் பெண் கேட்டாள்.

''ஆமாம்மா. ஒன் பேரு என்ன?''

''என் பேரு சௌதாமினி. சுதான்னுதான் கூப்பிடுவாங்க.''

''சுதா! அழகான பேரு. நீயும் அழகாத்தான் இருக்கே. ஆமா, எந்த ஊரு, சுதா, ஒனக்கு?''

''அநாதைக்கு ஊரேது? வீடேது? வாசலேது, அம்மா?''

''அப்படிச் சொல்லிட முடியுமா? யாராயிருந்தாலும் எங்கேயாவது பிறந்து, எங்கேயாவது வளர்ந்துதானே இருக்கணும்? — சரி, அதான் போகட்டும்; நீ பல்லாவரத்துக்கு எங்கே விடியக்காலையிலே வந்தே? ஏன் மயங்கி விழுந்து கிடந்தே?''

''மன்னிச்சுக்குங்க, அம்மா. அதையெல்லாம்பத்தி எங்கிட்டே எதையும் கேட்காதீங்க. அதைச் சொல்லக்கூடிய நிலைமையிலே நான் இப்போ இல்லே. தயவுசெய்து என்னைப் போக விட்டுடுங்க.''

அவளுடைய பிடிவாதம் மோகனைச் சோர்வடையச் செய்தது. ''அப்போ எங்கே போகணும்னுவது சொல்லுங்க, அம்மா; என் காரிலேயே கொண்டு விட்டுடறேன்'' என்று சொன்னான் அவன்.

''நன்றி, சார். அந்த மட்டும் நடு ரோட்டிலே கவனிக்கிறவங்க இல்லாதபடி கிடக்க விடாமல், என் மேலே இரக்கம் காட்டி மாம்பலம் வரையிலே கொண்டு வந்து சேர்த்தீங்களே, அதுவே எனக்கு அதிகம். நான் வரேங்க; வரேம்மா.''

சுதா சீட்டிலிருந்து எழுந்து காரின் கதவைத் திறப்பதற்குக் கைப்பிடிக்காகத் துழாவுவதைக் கண்டு பொன்னம்மாளே கதவைத் திறந்து விட்டாள். அவள் அவசரமாகக் கீழே இறங்க முயன்று, அந்த முயற்சியில் கதவருகே நின்ற பொன்னம்மாள் மீது மோதிக் கீழே விழப் போனாள். பொன்னம்மாள் அவளைத் தாங்கிப் பிடித்துக் கொண்டு, ''மெதுவா, பார்த்து இறங்கு சுதா, என்ன அவசரம்?'' என்றாள்.

சுதாவிடம் மீண்டும் அந்தச் சோகச் சிரிப்பு மலர்ந்தது. ''பார்த்து இறங்கக் கூடியவளாகக் கடவுள் என்னைப் படைக்கலியே, அம்மா? நான் ஒரு கண்ணில்லாத கபோதி என்கிறதை நீங்க இன்னும் தெரிஞ்சுக்கலேயா?''

''சுதா!'' என்று கூவியபடி பொன்னம்மாள், தன் அணைப்பிலிருந்த அந்தப் பெண்ணின் முகத்தை நிமிர்த்திக் கண்களைப் பார்த்தாள். கண்கள் கண்களாகவே இருந்தன; ஆனால், அவற்றில் கருவிழி ஓட்டமும் இல்லை; ஒளியும் இல்லை!

''டேய் மோகன்! கண் தெரியாத பொண்ணுடா! இவளை எப்படீடா போகவிட முடியும்?'' அவள் குரலில் பச்சாத்தாபம் பரவியது.

சுதா பார்வையற்றவள் என்று அறிந்ததும் மோகனும் பதறித்தான் போனான். அவன் காரிலிருந்து இறங்கி, ''அத்தை! ரொம்ப நேரமா தெருவிலேயே நின்னு பேசிக்கிட்டிருக்கோம். அவங்களை உள்ளே கூட்டிக்கிட்டு வாங்க; எல்லாம் விவரமாகப் பேசலாம்'' என்றான்.

''வேண்டாங்க, என்னை விட்டுடுங்க. நான் எப்படியாவது சமாளிச்சுப்பேன்'' என்று உள்ளே வர மறுத்தாள் சுதா.

''எப்படிச் சமாளிப்பே, சுதா? என்ன சமாளிப்பே? ஊரு பட்டணம், அம்மா. நீ சின்னப் பொண்ணு. அழகா வேறே இருக்கே. கண்ணும் தெரியாது. சமாளிச்சுக்கிடுவாளாம் இல்லே? புத்தியுள்ள பொண்ணு பேசற பேச்சா இது? வாம்மா உள்ளே!'' என்று அவள் கையைப் பிடித்துக் கொண்டு வலுக்கட்டாயமாகப் பங்களாவுக்கு அழைத்துச் சென்றாள் பொன்னம்மாள்.

''அப்படியெல்லாம் மானுங்காணியா கண் தெரியாத சின்னப் பொண்ணைப் போகவிட்டிட முடியாது, சுதா. என் மருமகனே, 'போகட்டும்; விட்டிடு'ன்னு சொன்னாக்கூட நான் விட மாட்டேன். ஏன்னா, நான் ஒன்னை மாதிரி ஒரு பொம்புள்ளை. நம்ப ஜென்மத்துக்கு ஏற்படக்கூடிய அவலங்களெல்லாம் எனக்கு நல்லா தெரியும். அதனாலே நீ இங்கேயே இரும்மா; என் மகள் போலே ஒன்னைக் கவனிச்சுக்கறேன்.''

''பொண்ணுக்குப் பொண்ணு, நீங்க சொல்லிட்டீங்க. ஆனா ஒங்க மருமகன் என்ன நினைக்கிறாரோ?''

''எனக்கும் நீ அத்தைகூட இங்கே இருக்கிறதிலே ஆட்சேபம் ஒண்ணும் இல்லேம்மா சுதா'' என்றான் மோகன்.

சுதா அவர்களுடன் தங்க வந்து இரண்டு மாதங்களுக்கு மேல் ஆகியும், பொன்னம்மாளால் எவ்வளவோ முயன்றும் அவளுடைய பெயரைத் தவிர வேறு எதுவும் தெரிந்து கொள்ள முடியவில்லை! (தொடரும்)

---

**பகைவன் வீழ்ந்தால் மகிழாதே. அவன் எனக்குச் செய்தது போல, நான் அவனுக்குச் செய்வேன் என்று எண்ணாதே.**

**எபிரேய மதம்**



# அநீதி, அடக்குமுறை, சிறை, சித்ரவதை

மீண்டும் மக்களிடம் வராமலிருக்க-

## ஆதரிப்பீர் ஜனதா கட்சியின்

# "ஏர் உழவன்"



தமிழ்நாடு ஜனதா கட்சி

# அன்றும் இன்றும்



நேற்று நிறுவப்பட்டது ஜோதி ஸ்டார்ட்டர்



இன்றே காணமுடிந்தது இன்ப நாள்.

முன்னேற்றத்தின் இரகசியம்—

# ஜோதி ஸ்டார்ட்டர்







மற்ற ஸ்டார்ட்டர்களைத் திரும்பத் திரும்பப் பழுது பார்க்கவோ, மாற்றிப்போடவோ தேவைப்படும் அதேநேரம் நல்லபடி ஓயாது உழைக்கிறது ஜோதி ஸ்டார்ட்டர். ஜோதி என்றாலே நீடித்த ஆயுள்-பலமுள்ள ஸ்டார்ட்டர். ஸிங்கிள் ஃபேஸ், ஓவர்லோடு, தாழ்ந்த வோல்டேஜ் ஆகியவற்றிலிருந்து மோட்டார்களைப் பாதுகாத்து எவ்வித இசைகேடான சேதமும் வராதபடி மோட்டாரைக் காப்பாற்றுகிறது இந்த ஸ்டார்ட்டர்.



## ஜோதி லிமிடெட், பரோடா

ஹைட்ராலிக்ஸ் • எலக்ட்ரிகல்ஸ் • பவர் எலக்ட்ரானிக்ஸ்

everest 23 r1/JY-tm

கிளை : 33, நுங்கம்பாக்கம் ஹைரோடு, சென்னை-600 034. போன் : 86007
விற்பனையாளர்கள்: வி. வி. & கோ. xxx/613, மகாத்மா காந்தி ரோடு, கொச்சி 682 016; ராஜும் & கோ., 61, சதி ரோடு, ஈரோடு; மேலக்கடை எலக்ட்ரிகல்ஸ், 215, மெயின் ரோடு, பெண்ணாடம் 606 105; ஆக்ட் ஏஜன்ஸீஸ், நம்பர் 8, நியூ கொழும்பு ஸ்டோர்ஸ், மாயூரம்; பெர்மியர் இண்டஸ்ட்ரீஸ், 80/81, செம்புதாஸ் ஸ்ட்ரீட், சென்னை 600 001; முருகன் ஆட்டொமேட்டிக்ஸ், காளியம்மன் கோயில் ஸ்ட்ரீட், உசிலம்பட்டி; ஓரியண்ட் எலக்ட்ரிகல்ஸ், 170, நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் ரோடு, சென்னை 600 001; பழனியப்பா டிரேடிங் கோ., 2 ஹெட்குவாட்டர்ஸ் ரோடு, கோயம்புத்தூர் 641 018; ஆட்டொமேட்டிக் பம்ப் ஸ்பெஷலிஸ்ட்ஸ், நம்பர் 4, பாண்டி பஜார், தி நகர், சென்னை 600 017.

குட்மார்னிங் டாக்டர்:

# சிறுநீருடன் சிறிது இரத்தமும் வெளிப்படுமானால்...

இருபத்தைந்து வயது இளைஞன் சங்கரன் மெல்லிய குரலில் கூறினான்: "இன்று காலை நான் சிறுநீர் கழிக்கும்பொழுது சிறிது இரத்தமும் வெளியேறிற்று, டாக்டர். இதற்கு முன் ஒரு தடவை — சுமார் மூன்று வாரங்களுக்கு முன் — இம்மாதிரி நிகழ்ந்தது. வலி, வீக்கம் ஏதுமில்லை. ஆனால் அதன் பிறகு இன்றுவரை சிறுநீரில் கோளாறு ஏதும் தென்படாததால் நான் கவலைப்படாமல் இருந்தேன். இன்று காலை சிறுநீர் சிவப்பாக இருந்ததைக் கண்ணுற்றதும் இனியும் தாமதிக்கக் கூடாது என்று இங்கு வந்து விட்டேன்."

"முதல் தடவை இப்படி நிகழ்ந்ததாகக் கூறினீர்களே — அன்றே வந்திருக்கலாம். இந்த மூன்று வாரங்கள் கூடத் தாமதித்திருக்க வேண்டியதில்லை" என்று கூறிவிட்டு இளைஞனின் சிறுநீரின் நிறத்தைச் சோதித்தேன். பிறகு அவரது இரத்தம், சிறுநீர் இவற்றை ஆய்வுக்கு அனுப்பிவிட்டு, சிறுநீரகத்தை 'எக்ஸ்-ரே' படம் எடுக்கவும் ஏற்பாடு செய்தேன். சிறுநீர் பரிசோதனையின் முடிவு வந்ததும் சிறுநீரில் சிவப்பு அணுக்கள் கூடுதலாக இருப்பது தெரிந்தது. சங்கரனுக்கு இன்னொரு தனி சோதனை செய்யவும் வேண்டியிருந்தது. ஒரு மருந்தை ஊசி மூலம் செலுத்தினேன். (Intra venous)

"இந்த ஊசி மருந்துக்குப் பிறகு குணமாகி விடுமா டாக்டர்?" என்றார் சங்கரன்.

"இந்த ஊசி மருந்து நோயைக் குணமாக்க அன்று. இது இரத்தத்துடன் கலந்து சிறுநீரகப் பகுதிக்குச் செல்லும்போது சில 'எக்ஸ்-ரே' படங்கள் எடுக்க வேண்டும். இம்மருந்தின் மூலம் சிறுநீரகத்தில் கட்டி, புண் (Ulcer) ஏதாகிலும் இருந்தால் அதனைத் தெரிந்து கொள்ள இயலும். இதற்கு ஐ.வி.பி. (Intra venous Pyelogram) என்று பெயர்.

"சிறுநீரகம் என்ன பணி செய்து உடலுக்கு உதவுகிறது? அதில் கட்டி அல்லது புண் ஏற்படக் காரணம் என்ன?"

"மனித உடலில் இரு சிறுநீரகங்கள் உள்ளன. உடலின் அசுத்தம், வியர்வை, மலம், சிறுநீர் மூலமாக வெளியேறுகிறது. அவை வெளியேறா விட்டால் இரத்தம் கெட்டுப் போய்விடும். பல நோய்கள் தோன்றவும் இடம் ஏற்படும். சிறுநீர் உடலிலிருந்து வெளியேறவும், இரத்தம் தூய்மைப்படவும் உடலிலுள்ள சிறுநீரகங்கள் இரண்டும் உதவுகின்றன. சிறுநீரகத்தில் உருக்கி நோய்க் கட்டி (Tubercular Ulcer), புற்று நோய், அல்லது கற்கள் ஏற்பட்டால், சிறுநீருடன் இரத்தமும் சேர்ந்து வெளிப்படலாம்."

"உருக்கி நோய் சிறுநீரகத்தையும் பாதிக்குமா டாக்டர்?"

"காற்றின் மூலம் பரவும் நோய் அது. முதலில் நுரையீரல் (Lungs)தான் பொதுவாகப் பாதிக்கப்படும். நோய் உடலில் வேரூன்றி விட்டால் இரத்தத்தின் மூலம் சிறுநீரகம், மூளை போன்ற பல பகுதிகளுக்கும் பரவும் வாய்ப்பு உண்டு."

"சிறுநீரகத்தில் ஏற்படும் கட்டியை எப்படிக் குணப்படுத்தலாம்?"

"உருக்கி நோய்க் கட்டி மிகச் சிறியதாக இருந்தால் அதனை மருந்துகள் மூலம் குணப்படுத்திவிடலாம். 'ஸிஸ்டாஸ்கோபி' (Cystos copy) என்ற பரிசோதனை முறை, சிறுநீர்ப் பையில் கட்டி ஏற்பட்டால் அதனை எளிதில் அறிய உதவும். சிறுநீர் வெளிப்படும் துவாரத்தின் மூலம் மெல்லிய கம்பி போன்ற கருவியை உட்செலுத்தி, அக்கருவியில் பொருத்தப்பட்டுள்ள கண்ணாடி (லென்ஸ்) மூலம் கட்டியின் அளவு, இடம் பெற்றுள்ள பகுதி, இவற்றைக் கண்டறிந்து, கட்டியினைச் சுரண்டி எடுத்துவிட முடியும். சிறுநீரகம் சிறிதளவே பாதிக்கப்பட்டிருந்தால், பாதிக்கப்பட்ட பகுதியை மட்டும் வெட்டி எடுத்து விடலாம். முழுவதுமே பாதிக்கப்பட்டிருந்தால் அந்தச் சிறுநீரகத்தையே எடுத்துவிட நேரிடலாம்."

"ஒரு சிறுநீரகத்தை அறுவை செய்து எடுத்து விட்டால் மற்றொன்றின் இயக்கத்தாலேயே மனிதன் உயிர் வாழ முடியுமோ?"

"முடியும். இரண்டையுமே இழந்து விட்டாலும் செயற்கைச் சிறுநீரகத்தினால் (Dialysis) உயிர் வாழலாம். இளைஞர்களாக இருந்தால், வேறு ஒருவரின் சிறுநீரகத்தைப் பொருத்திவிடலாம். சிறுநீரகத்தில் புற்றுநோய் வந்தாலும் அறுவைச் சிகிச்சை பயனளிக்கும். ஆனால், சிகிச்சை பெற்றவர் ஆறு மாதங்களுக்கு ஒரு முறை சோதனை செய்து கொள்ள வேண்டியது அவசியம். அதே இடத்தில் மீண்டும் புற்று நோய்






ஏற்பட்டாலும், வேறு பகுதியில் தோன்றி னாலும் ( Secondary) மீண்டும் அறுவைச் சிகிச்சை செய்துகொள்ள நேரிடும்.''

''ஆண் - பெண் இரு. பாலாருக்குமே சிறுநீரகத் தில் கட்டி அல்லது புண் ஏற்படும் வாய்ப்பு உண்டா?''

''இருபாலாருக்கும் ஏற்படும் வாய்ப்பு உண்டு. பொதுவாக இருபது வயதுக்குட் பட்டவர்களுக்கு இவ்விதம் கட்டி ஏற்படுவ தில்லை. 20 முதல் 40 வயது வரை உள்ளவர் களே பெரும்பாலும் இதற்கு உள்ளாகின் றனர். ஆனால், சிறுநீரகத்தில் அல்லது சிறு நீர்ப் பையில் புற்றுநோய் தோன்றும் வாய்ப்பு நாற்பது வயதுக்கு மேற்பட்டவர்களுக்கே அதிகம் எனலாம்.''

''சிறுநீரகத்தில் உருக்கி நோய்க் கட்டி ஏற்படாமல் தடுக்க வழி உண்டா?''

''உருக்கி நோய் உடலில் பரவாமல் உட னடியாகச் சிகிச்சை செய்து தடுத்து விடு வதன் மூலம் சிறுநீரகத்தைக் காப்பாற்றிக் கொள்ளலாம். ஒருவர் தொடர்ந்து பத்து, பதினைந்து நாட்கள் இருமிய வண்ணம் இருந்தால், உடனே மருத்துவரிடம் சென்று காண்பிக்க வேண்டும். அடிப்படைக் காரண மான உருக்கிநோய்ச் சிகிச்சை செய்து குணப்படுத்தி விட்டால், பின்னர் அது சிறு நீரகத்துக்கோ அல்லது உடலின் பிற பகுதி களுக்கோ பரவாது.''

டாக்டர் துரைசாமி கூறக் கேட்டு
எழுதியவர்: ஆர். பி.



ஃபிரான்சின் கடற்கரை நகரான செயின்ட் மாலோ விலுள்ள மீனவர்கள், மீன் பிடிக்கும்போது முத லில் கிடைப்பவற்றை வைத்துக்கொள்ள மாட்டார்கள், முதலில் [கிடைத்த மீனின் வாயில் நிறைய மதுவை ஊற்றி, மீண்டும் கடலில் எறிந்து விடுவார்கள். கட லுக்குள் செல்லும் மீனை, மற்ற மீன்கள் சூழ்ந்து கொள்ளும். மதுவின் மயக்கம் அந்த மீன்களையும் கவர்ந்து விடும். எல்லா மீன்களும் 'நான் முந்தி நீ முந்தி' என்று மதுவைக் குடிக்க, கடல் மட்டத் துக்கு நீந்தி வரும். மீனவர்கள் எளிதில் எல்லா மீன் களையும் பிடித்து விடுவார்கள்! —அறவாழியான்

("Believe it or not" புத்தகத்திலிருந்து)

யமனுக்குத் திடீரென்று பக்தி உணர்ச்சி பெருகவே, அவன் தன் வேலையை மறந்து க்ஷேத்திராடனம் புறப்பட்டான். அழகர் மலை அருகே வந்தபோது, அதன் ரம்மியமான அழகில் சொக்கிப் போய்த் தவம் செய்ய ஆரம்பித்தான். விஷ்ணு தோன்றி முக்தி அளிக்க முன்வர, யமன் அவரை அந்த இடத்திலேயே தங்கும்படி இறைஞ்சினான். விஷ்ணு 'ஓகே' என்றார். என்ஜினீயர் விசுவகர்மா விமானம் ஒன்று நிர்மாணிக்க, விஷ்ணு ஸ்ரீ, பூதேவிகளுடன் தங்கிவிட்டார்.

—விருஷபத்ரி
மாகாத்மியத்திலிருந்து.

## 24

மொட்டை ஓர் உறுதியுடன் 'டெபாஸிட் கட்டுவான்' என்று ஷங்கரிடம் கூறியபோது அவன் ஏதோ ஒரு சமாதானத்துக்காகத்தான் அப்படிச் சொல்லுகிறான் என்று லாவண்யா நினைத்தாள். அவளுடைய இயலாமை அவருக்குத் தெரியக் கூடாது என்ற நல்லெண்ணம்தான், மொட்டையின் அவசர உறுதிமொழிக்குக் காரணமாக இருக்கவேண்டும். லாவண்யா மொட்டைக்கு மனத்தினுள் நன்றி தெரிவித்துக் கொண்டே பிரச்சினையை ஆராய்ந்தாள்.

அப்பாவை கான்சர் எனும் ராட்சதனிடமிருந்து அவளுடைய நாலாயிரத்து இருநூறு ரூபாய் காப்பாற்றுமோ காப்பாற்றாதோ, அது வேறு விஷயம். அப்பா இறந்தே போனாலும், பெற்ற பெண் தக்க சமயத்தில் பண உதவி செய்தாள் என்ற திருப்தி அவரிடம் இருக்கும். நன்றி கெட்ட பெண் தமக்காக ஒரு துரும்பைக்கூட எடுத்துப் போடவில்லையே என்ற ஆத்திரமோ தாபமோ அவருடைய அந்தராத்மாவுடன் பிரயாணம் செய்யாது. அவர் போன பிறகு, அம்மாவும் தன் விதவைக் கோலத்தின் எரிச்சலில் தினம் தினம் லாவண்யாவைச் சபித்துக் கொண்டிருக்க மாட்டாள்.

இப்போது டெபாஸிட் கட்டலாம் என்று மொட்டை வெறும் வாய் வார்த்தையாகச் சொல்லியிருந்தால் அவள் கவலைப்பட வேண்டியதில்லை. ஆனால் கேவலம் ஒரு டெபாஸிட் தொகை இல்லாத ஒரே காரணத்தினால் நல்ல வேலை வாய்ப்பை அவன் இழக்கிறானே? மாதம் முப்பது நாட்களும் அயல்நாட்டுப் பயணிகளுடன் வெய்யிலிலும் மழையிலும் அலைந்தால் அறுநூறு ரூபாய் கிடைக்கும். ஆனால் அவனுக்கு ஏது மாதத்தில் முப்பது நாள்? சில மாதங்களில் – அதுவும் சித்திரை வைகாசி மாதங்களில் மாதம் ஐந்தாறு நாட்கள்கூடத் தேறாதே? ஒரே இடத்தில் நல்ல புடவையைக் கட்டிக் கொண்டு, மின்சார விசிறியின் கீழ் உட்கார்ந்து கலைக்கூடத்தைப் பராமரிப்பதற்கு யார் எழுநூறு ரூபாய் கொடுக்கப் போகிறார்கள்?

இந்தக் கேள்வி மனத்தில் தோன்றியபோது ஷங்கருடைய புத்தி சுவாதீனத்தைப் பற்றி ஒரு சந்தேகம் எழுந்தது. அடுத்த கணமே, ஷங்கர் ஓர் அயோக்கியனோ என்ற பயமும் ஏற்பட்டது. மொட்டை அறிமுகப்படுத்தியிருக்கிறான். நிச்சயமாகப் பித்தலாட்டக்காரனாக இருக்க முடியாது. ஆனால் மொட்டையும் ஏமாந்து போயிருக்கலாமே? வெளிவேஷத்தில் யார்தான் யாரை இந்தக் காலத்தில் ஏமாற்ற முடியாது?

மொட்டையும் ஷங்கரும் என்னென்னவோ பேசிக் கொண்டிருந்தார்கள். அவள் காதில் ஏதும் விழவில்லை. அவள் தன் சிந்தனையிலேயே ஊறிப் போயிருந்தாள்.

திடீரென்று, ''லாவண்யா!'' என்ற குரல் எழவே, திடுக்கிட்டுப் பார்த்தாள்.

''காஃப்பி!'' என்றார் ஷங்கர்.





# மதுரநாயகி

டி.வி.ஆர்

"தாங்க்ஸ்". அவன் காப்பியை எடுத்துக் குடிக்கலானான். மொட்டை தன் தொழிலின் நேர்மையைப் பத்தி இப்போது பேசிக்கொண்டிருந்தான். ஷங்கர் சிரிக்கச் சிரிக்கக் கேட்டுக் கொண்டிருந்தார்.

பாண்டியன் ஹோட்டலை விட்டு வெளியே வந்ததும், மொட்டை, "லாவண்யா, அவர் சொன்னபடி நாளைக்கே வேலையை ஒப்புக் கொண்டுவிடு... ஆர்ட் சென்டர் திறக்கிற வரையில் பூர்வாங்க வேலை நிறைய இருக்கு..." என்றான்.

"என்ன மொட்டே உனக்குக் கேலியா இருக்கா?"

"ஏன்... நான் என்ன கேலி செய்தேன்?"

"ஐயாயிரம் ரூபாய் டெபாஸிட் கட்டுவான்னு சொன்னியே, எப்படின்னு எனக்குக் கொஞ்சம் சொல்றியா?"

"அதைப் பத்தி நீ ஏன் கவலைப்படறே, லாவண்யா?"

"பின் நான் கவலைப்படாமே யார் கவலைப் படணும்னு சொல்றே? என்கிட்டே இருக்கிற பணத்தை யெல்லாம் எடுத்தாச்சு, அப்பாவுக்குன்னு ஒதுக்கியாச்சு. அதை இப்போ டெபாஸிட்டுக்காக வைக்கச் சொல்றியா?"

"நான் ஒண்ணுமே சொல்லலே, லாவண்யா.... நீதான் எல்லாத்தையும் சொல்றே... நீ உன் அப்பாவுக்காக ஒதுக்கி வைச்சிருக்கிற பணம் நாலாயிரத்து இருநூறு தான்... டெபாஸிட் ஐயாயிரம்..."

"என்னூறை நான் தரேன்னு சொல்லப் போறியா?"

"நான்தான் இன்னும் எதையுமே சொல்லலையே... நீ ஏன் ஊகிக்கக் கஷ்டப்படறே?"

"அப்போ?"

"நீ நாளைக்கு வேலையிலே சேரறே...கால் தேய நடந்து நடந்து நாளுக்கு இருபது ரூபாய் கூலி வாங்கற வாழ்க்கை போதும், லாவண்யா!"

"நான் வாங்கறது கூலின்னு சொல்றியா?"

"அதைச் சம்பளம்னு உன்னாலே சொல்ல முடியுமா?"

"முடியாதுதான். அம்பா கூட நான் ஒரு நாள் வேலை முடிஞ்சதும் வாங்கிக்கிற பணம் கூலி வகையைச் சேர்ந்ததுதான்னு ஒருமுறை சொன்னா. எனக்குச் சுருக்குன்னு பட்டது."

"யாரையும் ஏமாத்தாமே, பொய் சொல்லாமே உடம்பாலே உழைச்சுக் கிடைக்கிற பணம் நல்ல பணம். அது கூலியானால் என்ன, சம்பளமானால் என்ன...அது ஒரு ஊதியம். ஆனால் தினசரி ஊதியம் இனிமேல் உனக்கு வேண்டாம்."

"ஓகே... டெபாஸிட்?"

"நான் கட்டப் போறேன்."

"நீ கட்டப் போறியா?"

"ஆமாம். ஏன், கட்டப்படாதா?"

"நீ எதுக்காகக் கட்டணும்?"

"நான் எதுக்காக இந்த வேலையை உனக்குச் சிபாரிசு செய்யணும்? இந்த மதுரையிலே எனக்கு ஆயிரம் பெண்களைத் தெரியும். ஐயாயிரம் அப்பா அம்மாக்களைத் தெரியும். அந்தப் பெண்களை யெல்லாம் விட்டு விட்டு நான் ஏன் உன்னைச் சிபாரிசு செய்யணும்?"

"அதைத்தான் நானும் கேட்கிறேன், மொட்டை! ஏன் நீ எனக்காக இதை யெல்லாம் செய்யணும்?"

"காரணத்தை அலசி ஆராய ஆரம்பிச்சா எனக்கே குழம்பிப் போயிடும். ஆனால் நிச்சயமா இல்லாத ஒரு காரணத்தைச் சொல்லிடறேன்...."



''அதையாவது சொல்லு.''

''உன்மேலே ஆசைப்பட்டு இதை நான் செய்யலே!''

''மொட்டே!''

''ஆமாம், லாவண்யா! என்னிக்குமே நான் உன்னை அந்தக் கண்ணோடு பார்த்ததில்லே... பார்க்கணும்னு நெனைச்சதுமில்லே...சரி சரி. ஏன் ரோட்டிலே இதெல்லாம் பேசிண்டு இருக்கணும்? இப்ப நேரே பாங்குக்குப் போய்ப் பணத்தை எடுக்கிறேன்.''

''மொட்டே!''

''என்ன லாவண்யா?''

''பாங்கிலே உனக்கு இவ்வளவு பணம் இருக்குன்னு எனக்குத் தெரியவே தெரியாது.''

''என் அப்பா ஊதாரியாச் செலவு செய்து செத்தாலும் கடனை வைக்கலே, லாவண்யா. அம்மாவுக்கும் எனக்கும் கொஞ்சம் வைச் கட்டுத்தான் போனார். அம்மா கிட்டே நூறு பவுனுக்கு நகை இருந்தது. மஞ்சக் கயிறு போனப்பறம் நகையெல்லாம் வித்துப் பணமாக்கி ஒரு டெபாஸிட்டா போட்டிருக்கோம்... மாசம் முந்நூறு ரூபாய் வட்டியா வர்றதுன்னு பார்த்துக்கோயேன்!''

''அப்ப நீ ஏன் நாள் முழுதும் கால் கடுக்க க்யூவிலே நின்னு எட்டும் பத்துமா சம்பாதிக்கணும்?''

''ஆம்பிளைன்னு ஒரு வேலை வேண்டாமா? நல்ல வேலை கிடைக்கிற வரைக்கும் வீட்டிலே சோம்பேறியா இருக்க எனக்குப் பிடிக்கலே... என் வயித்துக்காவது நான் சம்பாதிக்க வேண்டாம்?''

''அப்ப உனக்கு ஒரு நல்ல வேலை கிடைச்சா இந்தத் தொழிலை விட்டுடுவியா?''

''சந்தேகம் என்ன? ஆனால் நீ கவலைப் படாதே... எனக்குக் கிடைக்காது...'' என்று சிரித்தான் மொட்டை.

''நீ கட்டற டெபாஸிட்டை நான் எப்படித் திருப்பித் தரணும்?''

''அதைப் பத்தி இன்னிக்கே முடிவு எடுக்கணுமா?''

• • •

மொட்டையைப் பற்றி என்ன நினைப்பது என்று கூட லாவண்யாவுக்குத் தெரியவில்லை. இத்தனை ஆண்டுகளாக மொட்டை எத்தனையோ லட்சக் கணக்கான ஆண் உருவங்களில் ஒன்று என்றுதான் மதித்திருந்தாள். சென்ற சில மாதங்களில் அவனுடைய லட்சிய வாழ்க்கையும், தன் அம்மா மீது அவன் வைத்திருக்கும் பக்தியும் அவளை வியக்கச் செய்திருக்கின்றன. ஆனால் அவையும் ஒரு மனிதனுடைய இயல்புகளாகத்தான் தோன்றின.





''என்னுடைய கட்சிக்காரர்கள் எவ்வளவு சொல்கிறார்களோ அவற்றில் பாதிதான் நான் நம்புவேன்'' என்றார் ஒரு வழக்கறிஞர்.
''என்னுடைய கட்சிக்காரர்கள் எவ்வளவு சொல்கிறார்களோ அதை இரண்டு மடங்காக நான் நம்புவேன்'' என்றார் ஒரு வருமான வரி அதிகாரி. — ஹாண்ட்புக் ஆப் ஜோக்ஸ் - ராமு

ஆனால் இன்று அவன் அவளுடைய மன நிலையையே மாற்றி விட்டான். எந்தக் கைமாறையும் எதிர்பார்க்காமல், அவளிடம் எதையும் இறைஞ்சாமல் அவன் அவளுக்கு ஒரு நன்மையைச் செய்கிறான் என்றால், அது அவனுடைய பரிசுத்தமான உள்ளத்தைத் தானே காட்டுகிறது? அவளுடைய அழகு கூட ஒரு காரணமாக இல்லை என்பதை அவள் உணர்ந்தபோது, அவனைப்பற்றிப் பெருமையே அடைந்தாள். முதன் முதலாக ஓர் ஆணின் உருவம், நிழலைப்போல் அவளைத் தொடர்ந்து வருவதையும் அவள் உணர்ந்தாள்.

● ● ●

அன்று மாலை ஆறரை மணி.

தையற் கடையிலிருந்து திரும்பிய லாவண்யா காக்காத் தோப்பினுள் பிரவேசிக்கும்போது, ஹரிணியின் கார், தன் வீட்டு வாசலில் நிற்பதைக் கண்டாள். ஹரிணி அவள் வீட்டுக்குத்தான் வந்திருக்கிறாளோ?

அருகே போன பிறகுதான், காருக்குப் பக்கத்தில் சுந்தரேசன் நிற்பது தெரிந்தது. ஆந்திர, கேரள, கர்நாடக மாநில பஸ்களிலிருந்து இறங்கும் ஆயிரக் கணக்கான பயணிகளுக்குத் தலைக்கு இருபத்தைந்து பைசா என்று 'ரேட்' போட்டுப் பணம் சம்பாதிக்கும் சுந்தரேசன் எதற்கு நிற்கிறான்? ஒருவேளை அவளுக்கு ஏதாவது ஒரு 'ஸ்பெஷல்' வேலை அளிக்கவா?

''குட ஈவினிங் லாவண்யா!''

''குட் ஈவினிங்... ஏன் இங்கே நிக்கறே சுந்தரேசன்?''

''ஹரிணியோடே வந்தேன். அவள் உன் அம்மா கிட்டே பேசிண்டிருக்கா.''

''அப்படியா?''

''ஆமாம்... மிஸ் லாவண்யா, இன்னொரு சேதி!''

''என்ன?''

''வக்கீல் ராமையா பங்களாவிலே எனக்கு வேலையாயிடுத்து. சாப்பாடு போட்டு இருநூறு ரூபா தர்றார்.''

''வெரி குட். கன்க்ராஜுலேஷன்ஸ்!''

''ஹரிணி கல்யாணமானதும், அவரும் அவர் பெண்டாட்டியும் கொடைக்கானலுக்குப் போயிடறா. ஹரிணி புருஷன் வீட்டுக்குப் போயிட்டா பங்களாவிலே ஆபீஸ் மட்டும் தான் இருக்கும். அதை ஒருத்தன் பொறுப்பாப் பார்த்துக்க வேணுமா? அதான் என்னை அப்பாயிண்ட் பண்ணியிருக்கார் ராமையா.''

''சாப்பாடு போட்டு இருநூறு ரூபாய் விலே... அப்ப யாராவது உனக்குச் சமைக்க இருப்பார்களா?''

''நோ...நோ... நானே சமைச்சுப்பேன். தோட்டக்காரன், ஆபீஸ் பியூன் எல்லாரும் இருக்காளே.''

''வெரிகுட்!'' என்று சொல்லிவிட்டு லாவண்யா வீட்டினுள் பிரவேசித்தாள்.

அவள் உள்ளே செல்லவும், ஹரிணி சீதாமணியிடமிருந்து குங்குமம் பெற்றுக்கொண்டு புறப்படவும் சரியாக இருந்தது.

நெற்றியிலிருந்து விரலை எடுத்துக் கொண்டே, ஹரிணி, ''ஹலோ லாவண்யா!'' என்றாள்.

லாவண்யாவுக்கு என்ன சொல்வது என்று புரியவில்லை. ஹரிணிக்குப் பக்கத்தில் ரமணியும் நிற்பதான பிரமை எழுந்தது.

பெண்ணின் சங்கடத்தைப் புரிந்து கொண்டுதானோ என்னவோ, சீதாமணி, ''சங்கரி, ஹரிணிக்கு இந்த மாசக் கடைசியில் கல்யாணம். வர்ற வெள்ளிக் கிழமை லக்னப் பத்திரிகை!'' என்றாள்.

''கன்க்ராஜுலேஷன்ஸ் மிஸ் ஹரிணி!'' என்ற லாவண்யா, 'மாப்பிள்ளை யார்?' என்று கேட்கவில்லை.

''ஆத்திலே சுமங்கலிப் பிரார்த்தனை நடக்கப் போறது. இந்த ஃப்ரைடேக்கு நெக்ஸ்ட் ஃப்ரைடே... ஏழு சுமங்கிலிகளிலே உன் அம்மாவும் ஒருத்தி...''

''அம்மா, நீ நாளைக்கு மெட்ராஸ் போகல்லே?''

''போறேன்... ஆனா எங்களுக்காக ஸ்பெஷலா ஒரு நடை மெட்ராஸ்லேந்து வந்துட்டுப் போறேன்னு சொன்னேன்!''

''நீதான் என் வாயையும் கையையும் கட்டிப் போட்டுட்டியே ஹரிணி? பிளேன்லே போக வர ஏற்பாடு பண்றேங்கறா, சங்கரி! நான் ரயில்லேயே வந்து போறேன்னு சொன்னேன்.''

''என் மதரும் உன் மதரும் சின்ன வயசிலே பல்லாங்குழி ஆடினவா... என் மதர் தான் சொன்னா...''

''இப்ப உன் அம்மா எங்கேயோ நான் எங்கேயோ! இருந்தாலும் என்னை மறக்கலை ராஜம்மா. அம்மாகிட்டே சொல்லுமா, ஹரிணி, நான் நிச்சயமா வருவேன்னு.''

''சரி, மாமி... அப்ப நல்ல அரக்கிலே புடவை எடுக்கச் சொல்லிடறேன், என்ன? ஏழு சுமங்கலிகளிலே உங்களுக்குத்தான் ஒசத்திப் புடவை!'' என்றாள் ஹரிணி.

''அப்படி வித்தியாசம் காட்டப்படாதுமா!''

''நான் வரேன், லாவண்யா!''

''விஷ்யூ ஆல் தி பெஸ்ட்!''

''தாங்க்ஸ்!''

அவள் புறப்படவும் திபுதிபுவென்று நூற்றுக்கு ... பேர் வீட்டினுள் அவசரமாகப் பிரவேசிக்கவும் சரியாக இருந்தது. சுந்தரேசனும் அவர்களுடன் பதைபதைத்துக் கொண்டு வந்தான்.

''மாமி .... மாமி ..... லாவண்யா ....''

செய்தி என்ன என்று சொல்ல வந்தவர்களில் யாருக்குமே சில நிமிஷங்களுக்கு நா எழவில்லை. ஒரு பீதியுடன் சீதாமணி நிற்க, லாவண்யா செய்திக்காக மௌனமாகக் காத்திருந்தாள். (தொடரும்)

# பிரிட்டானியா பால் பிஸ்கட்

## வளரும் குழந்தைகளுக்கு சுவையான துணை




**சத்துமிகுந்த,
சுவையான பிரிட்டானியா
க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள்**




பிரிட்டானியா பிஸ்கட்டுகள் மிகச் சிறந்தவை

லின்டாஸ்-BBC.GLX.36-303 TM

என்னுடைய நண்பர் நாராயணன் வீட்டுக்குப் புதிதாக டெலிபோன் இணைப்பு கொடுத்திருந்தார்கள். அவருக்குச் சமீபத்தில் ஏற்பட்ட பதவி உயர்வு காரணமாக அலுவலகத்தாரே அந்த இணைப்புக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள்.

அன்று மாலை அவர் என்னைத் தம் வீட்டுக்கு அழைத்தார். டெலிபோன் வைப்பதற்காக அவர் புதிதாக வாங்கியிருந்த டீப்பாயைக் காட்டினார். டெலிபோனைப் பற்றிப் பாராட்டுவதற்கு ஒன்றும் இல்லாத காரணத்தினால் நான் அந்த டீப்பாயைப் பெரிதாகப் பாராட்டினேன்.

டெலிபோனில் என்வீட்டுக்காரியைத்தான் கூப்பிட்டேன். இரண்டு மூன்று முறை அது ஒலித்த பிறகு சரோஜா எழுந்து வந்து எடுத்தாள். ''ஹலோ!'' என்ற அவள் குரல் என் காதுகளில் விழுந்தது. சட்டென்று எனக்கு ஒரு யோசனை தோன்றியது. நான் என் குரலைப் பெண் குரலாக மாற்றிக்கொண்டேன்.

''மிஸ்டர் விசுவநாதன் வீடு தானே?'' என்று கேட்டேன்.

''ஆமாம்... நீங்கள்?'' எனக் கேட்டாள் சரோஜா.

''அவர் இருக்கிறாரா?''

''இல்லை. இன்னும் ஆபீஸிலிருந்து வரவில்லை.''

''நான்தான் லீலா பேசுகிறேன். வந்தவுடன் சொல்லுங்கள்.''

''லீலாவா?'' என்று வியப்புடன் அவள் கேட்டாள்.

''ஆமாம்... லீலா தான்... சொன்னால் போதும். அவர் புரிந்து கொள்வார்.''

''சரி, வரட்டும் சொல்கிறேன்!'' என்றாள் அவள் தயக்கத்துடன். அந்தத் தயக்கம் எனக்கு இன்னும் உற்சாகம் கொடுத்தது.

''நீங்கள் பேசுவது யார்...? அவர் அம்மாவா?'' என்று கேட்டேன்.

''இல்லை...அவர் என் வீட்டுக்காரர்.!'' என்றாள் அவள் பட்டென்று.

''ஓ! மிஸஸ் விசுவநாதனா?... உங்களைப் பார்க்க வேண்டும் என்று நான் என்னமாத் துடித்துக் கொண்டிருக்கிறேன்; தெரியுமா?''

''அப்படியா?. நீங்கள் யார் என்று சொல்லவில்லையே!'' என்று கேட்டாள் சரோஜா நெகிழ்ச்சியுடன். அவளைக் கொஞ்சம் உயர்த்தியவுடன் குழைந்தாள்.

பாழும் தொண்டை தொடர்ந்து அதே குரலில் பேச முடியாமல் தடை செய்தது. டெலிபோனை ஒரு கையால் மூடிக்கொண்டு தொண்டையைச் சரிசெய்து கொண்டேன்.

''நானா?...இப்போது இரண்டு மாதம் உங்கள் வீட்டுக்காரர் நாமக்கல் வந்திருந்தார் பாருங்கள்... அப்போது பழக்கம்!'' என்றேன்.

''பழக்கமா?'' என்று கேட்டாள் சரோஜா அதிருப்தியுடன்.

''ஆமாம்...மாமி!'' என்றேன் நான்.

எனக்குத் தெரியும். சரோஜாவை ''மாமி'' என்று யார் அழைத்தாலும் பிடிக்காது. வயதில் குறைந்தவர்கள் பெயரிட்டுக் கூப்பிட்டாலும் பொறுத்துக் கொள்வாள். மாமி என்றால் அவளுக்குக் கடுங் கோபம் வரும்.

''அவர் உங்களைப் பற்றி என்னிடம் ஏதும் சொல்லவில்லையே!''எனச் சந்தேகப்பட்டாள் சரோஜா.

''எப்படி மாமி சொல்வார்?... எல்லோரும் சகஜமாக எடுத்துக் கொள்வார்களா? ஆனால் உங்களைப் பற்றி என்னிடம் நிறையச் சொல்லியிருக்கிறார். நான் இப்போதுதான் நாமக்கல்லிலிருந்து பஸ்ஸில் வந்தேன். பஸ் ஸ்டாண்டிலிருந்துதான் பேசுகிறேன். அவர் கொடுத்த விலாசச் சீட்டு தொலைந்துவிட்டது. டெலிபோன் டைரக்டரியில் பார்த்துத் தெரிந்து கொண்டேன். ஆமாம்... அவர் எப்பொழுது வருவார்?''

''தெரியாது. உன் நம்பரைக் கொடு. அவர் வந்தால் பேசச் சொல்கிறேன்!'' என்றாள் சரோஜா.

''எனக்கு ஹோட்டல் விஜயாவின் போன் நம்பர் தெரியாது. அங்கே நாற்பத்தி ஒன்பதாம் அறையில் தங்கப் போகிறேன். நேரே அவரை அங்கே வரச் சொல்லுங்கள்!''

''சரி!''

''உங்களை எனக்குப் பார்க்க வேண்டும் என்று இருக்கிறது. முன்பெல்லாம் நீங்கள் ரொம்ப அழகாக இருப்பீர்களாம். என்னைப் போலக் கன்னங்களில் குழிகூட விழுமாம், அவர் சொல்லியிருக்கிறார்!''.

''எனக்கும் உன்னைப் பார்க்க வேண்டும் போலத்தான் இருக்கிறது.''

''ஓட்டல் விஜயா... ரூம் நம்பர் நாற்பத்தி ஒன்பது...கட்டாயம்!''

''சரி சரி!''

நான் போனைக் கீழே வைத்த பின் நாராயணன், அவன் மனைவி பத்மா, குழந்தைகள் எல்லோரும் பெண் போல் நான் பேசியதைக் கேட்டுச் சிரித்தார்கள்.

''நான் இப்போது உங்கள் வீட்டில் இருந்திருக்க வேண்டும். சரோஜா முகத்தைப் பார்த்து ரசித்திருக்க வேண்டும்!'' என்றாள் பத்மா.

''உன்னை ராமச்சந்திரமூர்த்தி என அவள் நினைத்துக் கொண்டிருக்கிறாள். நீ நாமக்கல் போய்க் கிருஷ்ண லீலை நடத்தி விட்டு வந்ததாக முடிவு செய்யப் போகிறாள்!'' என எச்சரித்தார் நாராயணன்.

நான் அடுத்த பஸ்ஸில் வீட்டுக்குப் புறப்பட்டேன்.

வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்த சரோஜா என்னைக் கண்டதும் முகத்தைத் திருப்பிக் கொண்டு உள்ளே போனாள். நான் சிரித்துக் கொண்டேன்.

## முழுப் பூசணிக்காயை...

உள்ளே முன் அறையில் மேஜையின் மேல் ஸூட் கேஸ், படுக்கை, கூஜா எல்லாம் தயாராக இருந்தன.

''எங்கே பயணம்?'' என்று கேட்டேன்.

''தூத்துக்குடிக்கு!'' என்றாள் சரோஜா.

''திடீரென்று இப்போது எதற்கு?''

''உங்கள் சௌகரியத்துக்காக...''

''புரியும்படிதான் சொல்லேன்.''

''நாமக்கல்லிலிருந்து விருந்தாளியை வரச் சொல்லி யிருக்கிறீர்களே... இடம் வேண் டாமா?''

''நாமக்கல்லா... விருந்தாளியா?'' ஒன் றும் புரியாதவன் போல் கேட்டேன்.

''ஞாபகம் இல்லையா... உங்கள் அருமை லீ....லா...!''

நான் திடுக்கிட்டவன் போல் நடித்தேன்.

''லீலாவா? அவள் இங்கு வந்தாளா?''

''போன் செய்தாள். ஹோட்டல் விஜயா, ரூம் நம்பர் நாற்பத்தி ஒன்பது.... காத்துக் கொண்டிருக்கிறாள். உடனே போங்கள்.''

''ஏன் இப்படி வெடு வெடுவென்று பேசு கிறாய்?''

''எனக்கு உங்கள் லீலா மாதிரியெல்லாம் குழையத் தெரியாது.''

''அவள் ஒரு குழந்தைப் பெண்... என் மேல் கொஞ்சம் ஒட்டுதல்... அதற்காக நீ ஊருக்குப் போக வேண்டாம்.''

''இங்கேயே இருந்து எல்லாக் கண்ண ராவியையும் பார்த்துச் சகித்துக் கொள்ள வேண்டுமா?... என்னால் முடியாது.''

அவள் கண்கள் கலங்கின. அவள் அழு தால் என்னால் தாங்க முடியாது. எனவே, ''இதோ பார்... கண்ணைக் கசக்காதே. லீலாவும் இல்லை...நீலாவும் இல்லை. உன்னைச் சீண்டுவதற்கு நான் நடத்திய நாடகம் எல் லாம். டெலிபோனில் பேசியது யார் தெரி யுமா? சாட்சாத் நானேதான். குரலை மாற் றிக்கொண்டு பேசினேன்'' என்றேன்.

''முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்கப் பார்க்கிறீர்களா? உங்கள் லீலாவோடு நீங்கள் இந்த வீட்டி லேயே வேண்டுமானாலும் ஆனந்த மாக இருங்கள். நான் என் பிறந்த கத்துக்கு — தூத்துக்குடிக்குப் போகிறேன்!'' என்று பிடிவாத மாகக் கூறினாள் சரோஜா.

''நீ வேண்டுமானால் நாராய ணன் வீட்டைக் கூப்பிட்டுக் கேள். உன் தோழி பத்மா கூடப் பக்கத்தில் இருந் தாள். அங்கிருந்துதான் நான் போன் செய்தேன்!'' என்றேன்.

அவள் இலேசில் நம்புவதா யில்லை. நான் அவள் காலைப் பிடிக் காத தோஷமாகக் கெஞ்சிய பொழுது, ''சரி சரி, அந்தப் பெட் டியில் உள்ள சாமான்களை எடுத் துப் பீரோவில் அடுக்குங்கள். படுக்கையையும் கூஜாவையும் உள்ளே கொண்டு போய் வையுங்கள்.' என உத்தர விட்டாள்.

# அன்னம்

அவளைத் திருப்திப்படுத்துவதற்காக அவள் சொன்ன காரியத்தை உடனே சிரமேற் கொண்டேன். பெட்டியைத் திறந்தேன் காலி; கூஜா? அதுவும் காலி.

சரோஜா விழுந்து விழுந்து சிரித்துக்கொண் டிருந்தாள்.

''நீ எதற்கு இப்படிச் சிரிக்கிறாய்?'' நான் தான் எரிந்து விழுந்தேன்.

''எனக்கு எல்லாம் தெரியும். இருடத் தெரிந்தால் தெற்றத் தெரிய வேண்டும் என் பார்கள். பொய் சொன்னாலும் பொருந்தச் சொல்ல வேண்டும். ஒரு நிமிஷம் கூடத் தொண்டையைக் கனைக்காமல் உங்களால் பேச முடியாது. உங்களுக்கு அது கைவராக் கலை என்று எனக்குத் தெரியும். என்னதான் பெண் குரலில் பேசினாலும் நீங்கள் எத்தனை எச்சரிக்கையாக இருந்தும் உங்கள் தொண் டையே எனக்குக் காட்டிக் கொடுத்துவிட் டது!'' என்றாள் சரோஜா.

''அப்புறம் ஏன் தொடர்ந்து பேசினா யாம்?'' எனக் கேட்டேன் ஆத்திரத்துடன்.

''உங்கள் கற்பனை எத்தனை தூரம் போகி றது என்று பார்த்தேன்.''

''உண்மையில் ஒரு லீலா இருந்தால்...''

''அவள் நாமக்கல்லுக்குப் பஸ் ஏறியிருப் பாள்!''

இப்படிக் கூறினாலும் சரோஜா அவள் கண்கள் கலங்கின. ''உங்கள் உள்ளத்தில் கூட இப்படி ஓர் ஆசை இருக்காது என்று தப்புக் கணக்குப் போட்டேனே! என் புத்தியைச் செருப்பால் அடிக்கணும்!''

இத்தனை நாளும் நல்ல பெயர் எடுத்திருந்த நான் என் புத்தியைச் செருப்பால் அடித்தாற் போலத் துடித்துப் போனேன்.



அம்மா
அவங்க பாத்ரூம்
ஏன் அவ்வளவு
நாற்றமடிக்குது
நம்முடையது
எவ்வளவு
வாசனையா
யிருக்கு?

கண்ணு நாம்
ஓடோனில்
உபயோகிக்கிறோம்




ஓடோனில் துர்நாற்றத்தை உடனடியாகப் போக்குகிறது. உங்கள் டாய்லெட்டை சுத்தமாக புதுமணங்கமழச் செய்கிறது.

ஓடோனில் விதவித நறுமணங்களில், பற்பல அளவுகளில், கொள்கலங்களில் கிடைக்கின்றது.

ஓடோனில் அந்து உருண்டைகளைவிட 30 மடங்கு அதிகமான சக்தியும் செயலாற்றலும் கொண்டது. அந்துப் பூச்சிகளின் தொல்லையிலிருந்து உங்களது ஆடைகளைப் பாதுகாக்க ஓடோனிலை அலமாரிகளில் வையுங்கள்.

**பல்சாரா**
நலமான வாழ்க்கைக்கு
நவீனமான வசதிகள்

BALSARA பல்சாரா & கம்பெனி (பிரை.) லிட்.

CHAITRA-BLS-162 TAM




## 15. "யார் என் கணவர்?"

நான் நேரத்துக்கு நீதிமன்றம் போய்ச் சேர்ந்தேன். கோர்ட் ரூமில் கசகசவென்று ஒரே கூட்டம். மக்கள் அவரவர்களுக்குத் தோன்றியபடி விமரிசித்துக் கொண்டிருந்தார்கள். ஒருவன் குற்றவாளியின் கட்சியைச் சார்ந்து பேசுவான். இன்னொருவன் எதிராளியின் கட்சியை எடுத்துக் கூறுவான். கட்சி, எதிர்க் கட்சி என்பதை விட்டு விட்டுப் பார்த்தால் உலகத்தில் பெரும்பான்மையான மனிதர்கள் இயல்பாகவே வம்பில் ஆர்வம் மிக்கவர்கள். எதையும் நோண்டி நோண்டி அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் கொண்டவர்கள். அதோடு ஒரு சம்பவத்தில் மாசு கற்பிக்கப்பட்டுக் களங்க வாடை வீசுமானால் அவர்கள் பேச்சில் சுவாரசியம் கூடி விடும்.

எந்தப் பெண்ணின் காரணமாகக் கொலை வழக்கு நடந்து கொண்டிருந்ததோ, அந்தப் பெண்ணைக் காண எல்லோரும் துடித்தனர். அதாவது சரயுதான் இங்கே பேச்சுக்கு மையப் புள்ளியாக விளங்கினாள். அவளைச் சுற்றியே பேச்சும் வளைந்து விரிந்தது.

ஒவ்வொருவராகப் பலருடைய சாட்சியங்கள் விசாரிக்கப்பட்டுப் பதிவு செய்யப்பட்டு வந்தன. ஆனால் அன்று வழக்கு முடிவுறவில்லை. கோர்ட்டின் சட்ட திட்டங்கள் தங்களுக்குரிய விதிமுறைகள்படிதானே நடைபெறும்? நான் போன நாட்கள் எல்லாம் ஏதாவது ஒரு காரணம் காட்டி வழக்கு ஒத்திப் போடப்படும். இப்படியாக எத்தனையோ நாட்கள் ஓடிவிட்டன.

கடைசியாக ஒரு நாள் என் பெயரும் கூப்பிடப்பட்டது. நான்தான் வழக்கின் மூன்றாவது சாட்சி. அரசாங்க வக்கீல் சாதுர்யமான தம் குறுக்குக் கேள்விகளால் என்னைக் குடைந்து எடுத்து உலுக்கி விட்டார். 'எனக்குக் குற்றவாளியைத் தெரியும். அவனைப் பலமுறை பல இடங்களில் பார்த்திருக்கிறேன்' என்று மட்டுமே என்னால் சொல்ல முடிந்தது. அதோடு ஒவ்வொரு முறை நடந்த நிகழ்ச்சியையும் எனக்குத் தெரிந்த அளவு விவரித்தேன்.

எனக்குத் தெரிந்தது அவ்வளவுதான் என்று வக்கீல் என்னை விட்டு விடலாம் அல்லவா? ஆனால் அப்புறம்தான் அவர் கேள்வியில் சூடு பிடித்தது. "நீங்கள் குற்றவாளியைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்? குற்றவாளி குற்றவாளிதானே?" என்று கேட்டார்.

"சம்பவம் நடந்தபோது நான் அங்கு இல்லையே! அதனால் அவன் குற்றவாளிதானா இல்லையா என்பதை என்னால் எப்படி உறுதியாகக் கூற முடியும்? என்றாலும் நான் ஒன்று சொல்ல முடியும். இந்தக் குற்றம் குற்றவாளியால் செய்ய முடியாத குற்றம் அல்ல. அவன் இதையும் செய்வான், எதையும் செய்வான்!" என்றேன்.

எனக்கு விடுதலை கிடைத்தது. ஆனாலும் வழக்கின் தீர்ப்பைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் என் மனத்திலும் வெகுவாகத் தலைதூக்கி நின்றது.

வழக்கின் முடிவு சரயுவின் சாட்சியத்தைப் பொறுத்திருந்தது. இந்தத் துர்ச்சம்பவம் நடந்தபொழுது சரயு சம்பவம் நடந்த இடத்திலேயே இருந்திருக்கிறாள். அதைக் காட்டிலும் முக்கியமான விஷயம் என்னவென்றால் அவள் குற்றவாளியின் மனைவி.

எனவே, எல்லோருடைய மனத்திலும் ஆர்வமும் ஆவலும் மேலோங்கி நின்றன.

சரயு கூண்டில் ஏற்றப்பட்டாள். நான் அவளைப் பார்த்தேன். வெகு நாட்களுக்கு அப்புறம் அவளைப் பார்க்கிறேன் என்றாலும் அத்தனை பெரிய துர்ச் சம்பவம் நிகழ்ந்த பின்னும் அவள் முகத்தில் எந்த விதமான மாறுதலையும் என்னால் காண முடியவில்லை. ஆனால் அவள் சொன்னதைக் கேட்டு எல்லோரையும் போல நானும் வியந்து போனேன். சாட்சியம் கூறும்போது அவள் தன் குரலில் ஒருமுறை கூடப் பதற்றம் காட்டவில்லை. அழுது புலம்பி ஆகாத்தியம் செய்யவில்லை. உறுதிதோய்ந்த நெஞ்சோடு, "நீதிபதி அவர்களே! அவர் நிரபராதி. குற்றம் ஏதும் செய்து அறியாதவர்" என்றாள்.

"அதெப்படி அவ்வளவு உறுதியாகச் சொல்கிறாய்?" என்று கேட்டார் நீதிபதி.

'அவன் ஏன் நிரபராதி? எப்படிக் குற்றமற்றவன்?' என்பதை ஒரே மூச்சில் சரயுவால் விளங்க வைக்க முடியவில்லை. ஆனால் சரயு

வின் பேச்சைக் கேட்டுக் கேட்டு என் வியப்பும் பரபரப்பும் வளர்ந்தோங்கின.

''போலீசுக்கு எதிரே நீங்கள் வேறு விதமாக அல்லவா வாக்கு மூலம் கொடுத்திருக்கிறீர்கள்?'' என்று அரசாங்க வக்கீல் குறுக்கிட்டார்.

''உண்மையைச் சொல்ல முடியாமல் போலீஸ் என்னைத் தடுத்து விட்டது. நான் சொல்ல விரும்பாததையெல்லாம் நான் சொல்லியதாக எழுதிக் கொண்டது. என்ன சொல்லியும் ஏழையின் பேச்சு அவர்களிடம் அம்பலம் ஏறவில்லை'' என்றாள் சரயு.

''ஆனால் நீங்கள் உங்கள் கணவரை விட்டு விட்டுப் பணத்துக்காகத்தானே பிரபுதயாள் சிங்கிடம் வேலைக்குப் போனீர்கள்?''

''ஆமாம். வேலைக்குப் போனேன். செய்தித் தாளில் விளம்பரம் வந்தது. அதற்கு நான் விண்ணப்பித்துக் கொண்டேன். என் அழகைப் பார்த்து அவர் எனக்கு வேலையும் கொடுத்தார். ஒரு வேலையும் இல்லாத நான் வேலைக்குப் போனது தவறு?'' என்று திருப்பிக் கேட்டாள் சரயு.



''தவறு என்று கூறவில்லை. ஆனால் இந்த வேலைக்குப் போகுமாறு உங்களைத் தூண்டியவர் உங்கள் கணவர் தானே?''

''கணவரா? யார் என் கணவர்?''

''குற்றவாளி நிசிகாந்தன் உங்கள் கணவரல்லவா?''



''இல்லை.''

''இல்லையா?''

''ஆம்!''

''அப்படியானால் நீங்கள் நெற்றியில் குங்குமம் இட்டு வகிட்டில் சிந்தூரம் வைத்துக் கொண்டிருக்கிறீர்களே?''

''ஏனென்றால் என் கணவர் உயிருடன் இருக்கிறார்.''

''அவர் யார்? அவருடைய முகவரி என்ன?''

''அவர் அலிப்பூர் சிறையில் இருக்கிறார். கொலைக் குற்றத்துக்காகக் கடும் ஆயுள் தண்டனை அனுபவித்துக் கொண்டிருக்கிறார்!'' என்றாள் சரயு.

''ஏன்? அவர் யாரைக் கொலை செய்தார்?''

பதிலுக்குச் சரயு சொன்னதைக் கேட்ட பொழுது நெஞ்சம் கலங்கியது: இதயம் விம்மி அழுங்கியது.

சரயுவின் கதையைக் கேட்டு நான் துணுக்குற்றேன். நான் எத்தனையோ மனிதர்களின் வாழ்க்கையைப் பார்த்திருக்கிறேன். எழுத்தாளன் என்ற முறையில் எத்தனையோ ஆண்களோடும் பெண்களோடும் நெருங்கித் தொடர்பு கொண்டு பழகியிருக்கிறேன். அவர்களுடைய வாழ்க்கைக் கதையையும் ஆர்வத்தோடு கேட்டிருக்கிறேன். தெருவிலே, பூங்காவிலே, மனிதர்கள் கூடும் இடங்களிலே ஒரு சாதாரண மனிதனைப் போல மக்களோடு கூட்டுறவு கொண்டிருக்கிறேன். ஒருவனைப் பார்த்த மாத்திரத்தில் அல்லது அவனோடு ஒருசில கணங்கள் உரையாடும் நேரத்தில் அவனை நன்கு புரிந்து கொள்ளும் ஆற்றல்

எனக்கு அபரிமிதமாக இருப்பதாக எனக்குக் கர்வமே கூட உண்டு.

ஆனால் அன்று சரயுவின் கதையைக் கேட்டு எனது அகந்தை அனைத்தும் தவிடு பொடியாகி விட்டது; மண்ணோடுமண்ணாகிவிட்டது.

சரயு வெறும் சாதாரணப் பெண்ணல்ல என்பதை உணர்ந்தேன். அவளைப் போன்ற அறிவாற்றல் மிகுந்த பெண்ணை இதற்குமுன் நான் என் வாழ்க்கையில் கண்டதே யில்லை.

சரயு சின்னஞ் சிறுமியாகக் கிராமத்தில் வாழ்ந்து கொண்டிருந்தபொழுது அவளைப் பார்க்க ஒருவன் ஒரு முறை வந்திருக்கிறான்.

அப்பொழுது சரயு திருமண வயதை எட்டிக்கொண்டிருந்தாள். ''அம்மா, குழந்தாய்! இன்று வெளியே எங்கும் போய் விடாதே. உன்னைப் பார்க்க இன்று சிலர் வரப்போகிறார்கள்'' என்று சரயுவைக் கூப்பிட்டுச் சரயுவின் தந்தை கூறினார்.

சரயுவுக்குச் சிறிது நேரம் பேசத் தோன்றவில்லை. மௌனச் சிலையாக நின்றுவிட்டு, ''என்னை எதற்காகப் பார்க்க வரப் போகிறார்கள்? நான் என்ன செய்துவிட்டேன்?'' என்று கேட்டாள்.

சிறு பிராயத்திலேயே சரயுவின் அன்னை காலமாகி விட்டாள். அதனால் தந்தையே சரயுவுக்கு அப்பா அம்மா இரண்டுமாக இருந்தார். சரயுவின் தந்தை ஹரிஹரர் ஒரு தாந்த்ரீகர் — தேவி உபாசகர். குடும்பஸ்தர்கள் எப்படி உபாசனை புரிவார்களோ, அப்படி உபாசனை புரிபவர். இல்லற தர்மத்தையும் உலகக் கடமைகளையும் நிறைவேற்றுபவர் என்றாலும் இரவு நேரங்களில் மயான பூமிக்குச் சென்று ஜப தபம் முதலியவை செய்வார். அவர் அங்கே என்ன செய்வார் என்பது யாருக்கும் தெரியாது. ஆனால் நள்ளிரவு கடந்த பின் வீடு திரும்பும்பொழுது அவர் நெற்றியிலே பெரிய குங்குமப் பொட்டு துலங்கும். கழுத்திலே செக்கச் சிவந்த செம்பருத்திப்பூ மாலை அசைந்தாடும். கண்களோ குன்றுமணி போலச் சிவந்திருக்கும்.

சரயு தந்தையைப் பார்த்துப் பயந்து போவாள். பகல் வேளைகளில் சாதாரணமாக இருக்கும் அவர் முகம் இரவு வேளைகளில் சரயுவை அச்சுறுத்துவதாக எப்படித்தான் ஆகுமோ, தெரியாது. அவருடைய மூச்சுக் காற்றில் ஒரு கடுமையான நெடி அடிக்கும்.



அந்த நெடியில் சரயுவுக்கு வயிற்றைக் குமட்டிக் கொண்டு வரும்.

''உங்கள் வாயிலிருந்து இதென்ன நெடியப்பா அடிக்கிறது? நீங்கள் என்ன சாப்பிட்டுவிட்டு வந்திருக்கிறீர்கள்?'' என்று சரயு கேட்பாள். சரயுவின் தந்தை பதிலேதும் சொல்ல மாட்டார். அவர் வாயிலிருந்து 'அம்மா, அம்மா' என்ற சொல் மட்டுமே வரும். அப்புறம் அங்கே அதிக நேரம் நிற்காமல் தம் அறைக்குள் நுழைந்து உட்புறமாகத் தாளிட்டுக் கொண்டு விடுவார்.

சரயுவுக்கும் அவள் தந்தை ஹரிஹரருக்கும் விந்தையானதொரு தொடர்பு இருந்தது. சரயு தன் தந்தையைச் சிரத்தையுடனும் நோக்குவாள்; அச்சத்துடனும் பார்ப்பாள். இது 'ஆற்றில் ஒரு கால், சேற்றில் ஒரு கால்' என்னும் கதையாக இருந்தது. பயம்-பக்தி என்னும் இரு படகுகளில் கால் வைத்து, அது ஆடி அசையும்பொழுது சரயுவுக்கு மனம் உடைந்து போகிறாற்போலிருந்தது.

சரயு மிகச் சிறு பிராயம் முதலே ஒரு செவிலித் தாயின் கையில் வளர்ந்தாள்.




கொஞ்சம் பெரியவள் ஆன பின்தான் அவளுக்கு அந்தச் செவிலித்தாய் தன் சொந்தத் தாய் இல்லை என்பதும் அவள் தந்தையிடம் மாதச் சம்பளம் பெறும் ஒரு வேலைக்காரி மட்டுமே என்பதும் தெரிய வந்தது.

சரயு ஒரு நாள் எப்படியோ துணிச்சலை வரவழைத்துக் கொண்டு தன் தந்தையிடம், "என் உண்மையான அம்மா எங்கே இருக்கிறாள்?" என்று கேட்டாள்.

பெண்ணின் கேள்வியைச் செவிமடுத்த ஹரிஹரருக்குத் தூக்கி வாரிப் போட்டது. இருந்தாலும் சமாளித்துக் கொண்டு, "ஏன்? உன்னைப் பார்த்துக் கொள்ளும் அம்மாதான் உன் சொந்த அம்மா!" என்றார்.

சரயுவுக்குக் கோபம் வந்தது. அந்தக் கோபத்தில் அழுகையும் வந்தது. "பொய், பொய்; நீங்கள் சொல்வது சுத்தப் பொய். எனக்கு நன்றாகத் தெரியும்!" என்றாள்.

"இல்லை, அம்மா! நான் பொய் சொல்லவில்லை. நான் பொய் சொல்லுகிறேன் என்று உன்னிடம் யார் சொன்னார்கள்? நான் எப்பொழுதும் 'அம்மா, அம்மா' என்று கூப்பிடுகிறேனே. நீ பார்க்கவில்லை? அம்மாவின் பிள்ளை ஒரு நாளும் பொய் சொல்ல மாட்டான் அம்மா! தெரிந்து கொள்!" என்றார் ஹரிஹரர்.

அவர் என்ன சமாதானம் சொல்லியும் சரயு தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்று பிடிவாதமாக இருந்தாள். "இல்லை. மைனா எனக்குச் சொல்லி விட்டாள். என் அம்மா செத்துப் போய் விட்டாளாம். என்னைப் பார்த்துக்கொள்ளுகிற அம்மா வெறும் வேலைக்காரிதானாம்!" என்றாள்.

அப்புறம் சரயுவிடம் இதை என்ன, எதையுமே மறைக்க முடியவில்லை. ஒவ்வொன்றாக அவளுக்கு அவள் அப்பாவைப் பற்றிய எல்லா விஷயங்களுமே தெரிந்துவிட்டன. மைனா மூலம் அவளுக்கு இன்னொரு விஷயமும் தெரிய வந்தது. அவள் அம்மாவை அவள் அப்பாதான் கொன்று போட்டு விட்டாராம்.

சரயுவுக்கு முதலில் நம்பிக்கை ஏற்படவில்லை. "உனக்கு இதெல்லாம் எப்படித் தெரிந்தது?" என்று அவள் மைனாவைத் தோண்டிக் கேட்டாள்.

"என் அப்பாவுக்கு எல்லாம் தெரியும். ஒரு நாள் இரவு தூங்கும்பொழுது என் அம்மாவிடம் அத்தனையையும் சொல்லிக் கொண்டிருந்தார். நான் கேட்டுவிட்டேன்!" என்றாள் மைனா.

சிறு பிராயத்திலேயே தன் தந்தையைப் பற்றி இப்படி எத்தனையோ விஷயங்களை அறிந்த சரயு அறிவால் தேர்ந்துவிட்டாள். உலகத்தில் எல்லாருமே சுயநலக்காரர்கள் என்னும் பாடத்தை இதன் மூலம் கற்றாள். இரவு மயானத்தில் வழிபாட்டை முடித்துக் கொண்டு வீடு திரும்பும் தந்தையின் வாயிலிருந்து வந்த வாடை சாராய வாடை என்பதையும் புரிந்து கொண்டாள். "சாராயம் என்றால் என்னடி?" என்று ஒரு நாள் மைனாவைக் கேட்டாள்.

"சாராயம் என்றால் என்ன என்று எனக்குத் தெரியாது. ஆனால் அது ஒரு வகை விஷமாம். சாராயம் குடித்தால் மனிதன் வெறி பிடித்து அலைவானாம்!" என்றாள் மைனா.

"சீ, போடி! விஷம் என்றால் என் அப்பா எப்பொழுதோ செத்துப் போயிருக்க வேண்டும். ஆனால் அவர் சாகவில்லை. அதனால் அது விஷம் இல்லை!" என்றாள் சரயு.

"நீ சுத்த மக்குடி சரயு! சாராயம் குடித்தால் மனிதனுடைய மூளைதான் சரியாக வேலை செய்யாதாம். வாய்க்கு வந்தபடி பிதற்றுவானாம். உன் அப்பாவுக்கும் மூளை சரியில்லை. வாய்க்கு வந்தபடி உளறிக்கொண்டிருக்கிறார். அவர் மூளை சரியாக இருந்தால் உன் அம்மா செத்துப் போவாளா? உன் அப்பாதான் உன் அம்மாவைக் கையை மடக்கிக் கொண்டு முஷ்டியால் குத்திக் குத்திக் கொன்று போட்டாராம்!" என்றாள் மைனா.

அன்று வீடு திரும்பிய சரயுவுக்குச் சாப்பாடு வேண்டியிருக்கவில்லை. படுக்கையில் போய் முகத்தைப் புதைத்துக் கொண்டு படுத்து விட்டாள்.

செவிலித்தாய் அவளைக் கெஞ்சாத தோஷமாகக் கெஞ்சிக் கூப்பிட்டாள். "எழுந்திருந்து சாப்பிட வா, அம்மா! உனக்காக நானும் பட்டினியாகக் கிடக்கிறேன், பார்!" என்றாள்.

"நான் ஒன்றும் சாப்பிடப் போவதில்லை. நீ என்ன சொன்னாலும் கேட்கப் போவதும் இல்லை!" என்றாள் சரயு.

அவள் அப்படி முரண்டு பிடித்ததற்காகச் செவிலித்தாய் சும்மா இருக்கவில்லை. இன்னும் அன்பைப் பொழிந்து, ஆதரவு காட்டி அவளை அழைத்தாள். சரயுவுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. "எதற்காக என்னை இப்படித் தொண தொணத்து எடுக்கிறாய்? நீ என் அம்மா இல்லை. எனக்கு நன்றாகத் தெரியும்!" என்று பொரிந்தாள்.

அதைச் செவியுற்றுச் செவிலித்தாய் பதறிவிட்டாள். "நீ என்ன சொல்கிறாய், அம்மா? உனக்கு நான் அம்மா இல்லையென்றால் வேறு யார் உனக்கு அம்மாவாம்?" என்று கேட்டாள்.

"நீ ஒரு வேலைக்காரி. அதற்காக அப்பாவிடம் கை நீட்டிச் சம்பளம் வாங்குகிறாய். எனக்கு ஒன்றும் தெரியாதென்று நினைத்து விட்டாயா? என் அம்மா செத்துப் போய் விட்டாள். என் அப்பா சாராயத்தைக் குடித்துவிட்டு, அந்தப் போதையில் அம்மா

# ஸிங்கர்

## மெரிட்* தையல் மெஷின்கள் மீது

அளிக்கும்

# ரொக்கத் தள்ளுபடி

# ரூ.25 லிருந்து ரூ.125

மெரிட்* தையல் மெஷின் ஒன்றை வாங்குங்கள். நீங்கள் தேர்ந்தெடுக்கும் மெஷினைப் பொருத்து உங்களுக்கு ரூ.25லிருந்து ரூ.125 வரை ரொக்கத் தள்ளுபடி கிடைக்கிறது.




## அல்லது

# 120 நாட்களில் பணத்தைத் தரவும்

—அதிகப்படி கட்டணம் எதுவுமில்லை
(பட்டியல் விலையைத் தான் கொடுக்கிறீர்கள்)

மேலும் கிடைக்கின்றன:
ஒவ்வொருவரின் வசதிக்கும் ஏற்ப எளிய தவணைமுறைகள்.

## குறிப்பிட்ட காலவரை மட்டுமே இந்தச் சலுகை உண்டு.

உங்கள் அருகாமையிலுள்ள ஸிங்கர் கடைக்கோ அல்லது
அதிகாரம் பெற்ற விற்பனையாளரிடமோ விரைந்து செல்லுங்கள்.

எப்போதும் ஸிங்கர் எண்ணெய், ஸிங்கர் ஊசிகள்,
ஸிங்கர் கத்தரிக்கோல் மற்றும் ஸிங்கர் பாகங்களையே வாங்குங்கள்.

* ஸிங்கர் கம்பெனியின் ட்ரேட் மார்க்.

CHAITRA-SM-202 TAM

## "கீதா சமாஜம்" துவக்க விழா!

11 & 12-6-77 – சனி, ஞாயிறு – இரு தினங்கள், மாலை 7 மணி

**கவிஞர் கண்ணதாசனின்**

"பகவத் கீதை" சொற்பொழிவு

**"துன்பங்களிலிருந்து விடுதலை"**

தேவர் கல்யாண மண்டபம், (கவிதா)

4, சர் சி. பி. ராமசாமி ஐயர் ரோடு, ஆள்வார்பேட்டை, சென்னை-18

அனைவரும் வருக!

---



**பலத்திற்கும்**
**ஆரோக்கியத்திற்கும்**

பண்டிட் D.கோபாலாசார்லுவின்

# ஜீவாம்ருதம்

1898 முதல் பிரசித்தி பெற்றது

ஆயுர்வேதாஸ்ரமம் (பி) லிமிடெட் சென்னை-17.

---



# போரோலின்

**ஆன்ட்டி செப்டிக் நறுமண க்ரீம்**

**பூத்த புது மலரின் சருமத்தை யுடைய பெண்மணி.**

போரோலின், ஆன்ட்டி செப்டிக் நறுமண க்ரீம், புண்களால் ஏற்படும் காய்ப்புகளையும் களங்கங்களையும், வடுக்களையும் தடுக்கின்றது. இது சிறு வெட்டுக் காயங்களை விரைவில் குணமாக்குவதுடன், வெடிப்புகள் ஏற்படுவதை முன் ஜாக்கிரதையாகத் தடுத்து நிறுத்துகிறது. சரும ஆரோக்கியத்தில் பூத்த புது மலர்ச்சியுடன் ஈர்க்கும் பெண்மணியையும் விட அதிகச் சிறப்பினை நீங்கள் உணரும்படிச் செய்கிறது.

**ஜி. டி. பார்மஸூடிகல்ஸ் லிமிடெட்**

9. கிரீஷ் அவென்யூ, கல்கத்தா-700 003

ளைக் குத்திக் குளிக் கொன்றே போட்டு விட்டார்! எல்லாம் எனக்குத் தெரியும்!''

அதற்கு மேல் எதுவும் பேச முடியாமல் சரயு விசித்து விசித்து அழலானுள். நாள் முழுவதும் படுத்த படுக்கையை விட்டு எழுந்திருக்கவில்லை. எத்தனையோ வேண்டியும் சாப்பிடவில்லை. தினம்போல ஹரிஹரர் நள்ளிரவு கடந்த பின்னரே வீட்டுக்குத் திரும்பினுர். கழுத்திலே செக்கச் செவேல் என்ற மலர் மாலை. விழிகளோ அதற்கும் மேல் சிவந்திருந்தன. 'அம்மா, அம்மா!' என்று அழைத்த வண்ணம் வீட்டுக்குள் நுழைந்தார். மகளின் அழிச்சாட்டியத்தைக் கேட்டறிந்த பின்னரும் அவர், ''சரயு இப்பொழுது என்ன செய்து கொண்டிருக்கிறுள்?'' என்று மட்டுமே கேட்டார்.

''சாப்பிடாமல் தூங்கிவிட்டாள்!'' என்றுள் செவிலித்தாய்.

''தூங்கினுல் தூங்கட்டும். நீயும் போய்த் தூங்கு!'' என்றவர் அப்புறம் அங்கே நிற்கவில்லை. தம் அறைக்குள் சென்று தாழ்ப்பாளை உட்புறமாக அழுத்திப்போட்டுக்கொண்டார்.

இந்த நிகழ்ச்சிக்குப் பின் சரயுவிடம் ஒரு பெரிய மாற்றம் தெரியலாயிற்று. இவ்வுலகம் உயிர் வாழ்வதற்காக மட்டும் ஏற்பட்டதல்ல, சாவதற்காகவும் ஏற்பட்டது என்று அன்று முதலே அவள் உணரலானுள். அதோடு இங்கே செத்துப் போவது வெகு சுலபம். இங்கு சாவதற்கு எத்தனையோ வழிகள் இருக்கின்றன. அவற்றைக் கையாண்டு ஒருவன் இறப்பது என்ற முடிவுக்கு வந்தால், அவனுக்கு இடையூருக யாரும் நிற்க மாட்டார்களென்பதையும் கண்டாள். செத்த பின், சாந்தி, சாந்தி; ஒரே மரண அமைதிதான்!

ஆனுல் உயிர் வாழ்வதென்றுல்?

இந்த உலகில் உயிர் வாழ்வது மெத்தக் கடினம். வாழ்வதற்காக ஒவ்வொரு கணமும் போராட வேண்டும்; சூழ்நிலைகளோடு எந்நேரமும் பொருத வேண்டும். பத்துப் பேருக்கு மத்தியில் ஒருவன் தலை நிமிர்ந்து பெயரெடுத்து வாழ விரும்பினுல், அவன் இடையருது போராடியே ஆக வேண்டும். சாகுமளவும் அவன் போராட்டம் ஓயாது; ஒயவே ஓயாது. தீராது; தீரவே தீராது. ஒருவன் தலை நிமிர்ந்து வாழ முடியவில்லையென்ருல், அவன் வாழ்ந்துதான் என்ன பயன்? அப்படி வாழ்வதை விடச் சாவதே மேல் அல்லவா?

சிலர் பெரும் பெரும் ஆசைக் கோட்டைகளைக் கட்டிக் கொண்டு பிறக்கிருர்கள். பிறரைக் காட்டிலும் அவருடைய எண்ணங்களும் ஆசைகளும் வடிவத்தில் பெரிதாகவும் ஒரு கட்டுக்குள் அடங்காது விரிந்து பரந்ததாகவும் இருப்பதுண்டு. அப்படிப்பட்டவர்கள் நாட்டையும் சமூகத்தையும் கட்டி ஆள்வதும் உண்டு. அப்படி ஆள்வோருக்குத் தலைவலியாகப் போவதும் உண்டு. அவர்கள் இல்லையென்ருகி விட்டால் அரசாங்கமும் நிம்மதியாக மூச்சு விடலாம். மனித சமுதாயமும் 'நல்ல வேளை; தப்பிப் பிழைத்தோம்' என்று அமைதியுறலாம்.

சூழ்நிலை சாதகமாக உள்ளவர்கள் எப்படியாவது தலை தூக்கி நிற்பார்கள். சிலருக்குத் தாய் தந்தையரின் அளவற்ற அன்பு கிட்டும். சிலருக்கு அள்ள அள்ளக் குறையாத செல்வம் கிட்டும். இவர்கள் விஷயமே தனி.

ஆனுல் சரயு....?

சரயுவுக்குச் சிறு பிராயம் முதல் என்ன கிடைத்தது என்று கூறுவது என்னைப் போன்ற எழுத்தாளர்களுக்குச் சிரம சாத்தியமான காரியம். ஆனுல் என்ன கிடைக்கவில்லை என்பது குறித்து நான் ஒரு பெரிய அட்டவணையே தயாரிக்க முடியும்.

சரயு கண் திறந்ததுமே மைனுவிடம் இருப்பது எதுவுமே தன்னிடம் இல்லை என்பதைக் கண்டாள். மைனுவின் தந்தை உத்தியோகம் பார்த்தார். அவள் தந்தை அது பார்க்கவில்லை. மைனுவின் தந்தை அவளை அன்புடன் சீராட்டினுர். சரயுவின் தந்தை அவளிடம் இம்மி கூட அன்பு காட்டவில்லை. மைனுவுக்கு அம்மா இருந்தாள். சரயுவுக்கு அம்மா இல்லை. அவளுக்கு ஒரு செவிலித் தாய் தான் இருந்தாள். அதுவும் மாதச் சம்பளம் பெற்றுக் கொண்டு அவளுக்கு உதவி வந்தாள். அவளுக்கும் சரயுவுக்கும் பெயருக்குக் கூட ஏதும் உறவு இல்லை.

இந்த மாதிரி சரயு என்னவெல்லாமோ கணக்குப் போட்டுப் பார்த்தாள். உலகத்தில் மனிதன் எது எது இருந்தால் சுகமாயிருப்பானே, அதில் ஒன்றுகூடத் தன்னிடம் இல்லை என்பதைக் கண்டாள்.

ராஜஷாஹீயில் அவள் வீட்டுக்கு அருகிலேயே ஒரு குளம் இருந்தது. ஒரு நாள் யாரிடமும் எதுவும் சொல்லாமலே அவள் அங்கே போனுள். குளத்தில் நீர் அலைமோதிக் கொண்டிருந்தது. அதன் நிறம் குளம் நல்ல ஆழம் என்பதையும் எடுத்துக் காட்டிக்கொண்டிருந்தது. அந்தக் குளம் மனிதனின் துயரங்கள் அனைத்தையும் நொடியில் களைந்து விடக் கூடியதாகத் தோன்றியது. அதில் ஒரு முழுக்குப் போட்டால், இதுவரை அவளிடம் இல்லாத எதுவுமே கிடைத்துவிடும் என்று அவளுக்குத் தோன்றியது. இன்பம், துன்பம் இல்லாத நிலையை அடைந்துவிடலாம் என்ற எண்ணம் அந்தப் பிஞ்சு உள்ளத்தில் எப்படியோ முளை விட்டது. வயதுக்கு மீறிய அறிவு! அறிவு மேவிய வயது!

நினைப்பைச் செயலாக்க அவள் முயன்ற போது..... (தொடரும்)

## திருவோத்தூர் வேதபுரீசுவரர் கும்பாபிஷேகம்



திருஞான சம்பந்தர் தேவாரம் இசைத்து, ஆண் பனையைப் பெண் பனையாக்கியருளிய திருத்தலம் திருவோத்தூர். அருணகிரிநாதரும் அருட்பிரகாச வள்ளலும் அருமறை புகன்ற அமலனைப் பாடிய பெருமையும் கொண்டது.

இப்பதியில் எழுந்தருளியுள்ள பாலகுசாம்பிகா சமேத வேதபுரீசுவரருக்கு 19-6-77 அன்று கும்பாபிஷேகம் நடைபெறவிருக்கிறது. திருப்பணி நிறைவேற அன்பர்கள் நன்கொடை தாராளமாக வழங்க வேண்டுமென்று கோரப்படுகிறுர்கள். அணுக வேண்டிய முகவரி: தலைவர், திருப்பணி, திருக்குடமுழுக்கு விழாக் குழு, திருவோத்தூர், செய்யாறு வட்டம், வடஆற்காடு மாவட்டம்.

# சிலம்புச் செல்வருக்குப் பாராட்டு விழா

"சிலப்பதிகார காவியத்தில் மூன்று இழப்புகள். இளங்கோவடிகள் முடியை இழந்தார். பாண்டிய மன்னன் செங்கோலை இழந்தான். கண்ணகி சிலம்பை இழந்தாள். மூன்றும் எங்கே போயின என்று பார்த்தேன். அவை எங்கும் போய் விடவில்லை. ஸ்ரீ ம. பொ. சி.யிடம் வந்துவிட்டன!" என்று பெருத்த கையொலிக்கிடையே கூறினார் ஸ்ரீ கி. வா. ஜ.

மயிலை இலக்கிய வட்டத்தின் சிலப்பதிகாரத் தொடர் சொற்பொழிவின் நிறைவு விழா மே மாதம் இருபத்தெட்டாம் தேதி பாரதிய வித்யா பவனில் கோலாகலமாக நடந்தேறியது. இச்சொற்பொழிவின் அமைப்பாளர் திரு மெய்கண்டார், மெய்யாகவே நல்லதொரு விழாவுக்கு ஏற்பாடு செய்திருந்தார். தலைமை வகித்த ஓய்வுபெற்ற நீதிபதி எஸ். மகராஜன் அவர்கள் திரு ம. பொ. சி.க்குப் பொன்னாடை போர்த்திக் கௌரவித்தார். மகாவித்வான் ஸ்ரீ மே. வீ. வேணுகோபால பிள்ளை







அவர்கள் வெள்ளி முடி அணிவித்து வாழ்த்தினார். செங்கோல் ஆசிரியரான ஸ்ரீ ம.பொ. சி.க்கு வாகீச கலாநிதி செங்கோலை அளித்துச் சொற் கிரீடமும் சூட்டினார். பேராசிரியர் பண்டிதமணி திரு லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் சிலம்பு நம்பி ஸ்ரீ ம.பொ. சி.யின் சொற்சிலம்பின் பெருமையைப் புகழ்ந்தார். ஸ்ரீ மெய்கண்டார் பாராட்டிதழ் படித்துக் கொடுத்தார். திரு ஔவை நடராஜன் சிலப்பதிகார யாத்திரை நூல் வெளியிட, சொற்பொழிவாற்றலில் முடிசூடா மன்னரான சிலம்புச்செல்வர் ம. பொ. சி. முடிசூடிய மன்னராகத் திகழ்ந்தது கண்களுக்கு விருந்தான காட்சியாக அமைந்தது. விழாப் படங்களைக் 'கல்கி' நேயர்களின் கண்களுக்கு விருந்தாக்கி வழங்குவதில் பெருமை கொள்கிறோம்.





இருவரும் சேர்ந்தாற்போல அந்தக் கலைப் பொருள் விற்பனை நிலையத்துக்குள் நுழைந்தார்கள். எதிரே தெரிந்த மூன்று பக்கக் கண்ணாடிகள் அவர்களை மூன்று ஜோடியாக அப்படியே பிரதிபலித்துக் காட்டின. தேவ லோகச் சிற்பி பிரம்மா மிகப் பொருத்தமாக இணைத்த ஜோடி. அவர்கள் பார்வை அங்குள்ள பொருள்களை ஆராய்ந்த பொழுது, தந்தத்தால் செய்து, கண்ணாடி மணிகளும் ஜரிகைத் தாளும் கலந்த கண்ணனின் ராஸ லீலையை விளக்கும் படத்தில் அவன் பார்வை தனியாகப் பதிந்தது.

''அதை எடுங்கள்'' என்று அவனது சுட்டு விரல் நீண்டதும், கடை ஆள் அதை அவன் முன் கொண்டு வைத்தான். அவனுக்கு முன்பாக அவள் அதைப் பற்றிக் கொண்டாள்.



வரிசையின் கடைசியில் அந்த இளைஞன் முரளி நின்றான். அலுவலகத்துக்கு நேரமாகி விட்டது. தோழியின் புடவைக்கு எம்ப்ராய்டரி வாங்கியதில் நேரமாகி விட்டது. இல்லாவிட்டால் பூசா ரோடில் அவள் பஸ் ஏறி இருப்பாள்.

பஸ் வந்து வரிசை கலைந்து ஏறியதில் அவளால் ஏற முடியாமல் பின்தங்கி நின்றாள்.

''நீங்க கனாட்ப்ளேஸ்தானே போகவேண்டும்? ஒரு ஸ்கூட்டரில் போகலாமா? உங்கள் பாங்க் தாண்டித்தானே என் அலுவலகம்?'' என்றான் முரளி.

அவள் தன் குடும்பத்தினருடன் தில்லி வந்து ஆறு மாத காலமே ஆகியிருந்தது. ஆட்டோவை ஸ்கூட்டர் என்று அழைக்கும் பழக்கத்தைப் புரிந்து கொண்டிருந்தாள். அலுவலகம் போயே தீர வேண்டும். என்ன செய்வது? அவள் தலையை அசைத்தாள்.

போகும்பொழுதே தன் பெயர் முரளி என்று அறிமுகப்படுத்திக் கொண்டு அவள் பெயர் விஜயா என்பதைத் தெரிந்துகொண்டான்.

அன்று முழுதும் அவனைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தாள். இந்தச் சந்திப்பு ஏற்பட்ட மறுநாள் நடுப் பகல் அவளைத் தேடிக் கொண்டு அலுவலகத்துக்கே வந்தான். எடுத்த எடுப்பிலேயே 'நீ இப்பொழுது என்னுடன் உணவுக்கு வருகிறாய்' என்றான்.

ஹோட்டலுக்குப் போய் இனிப்பு, காரம் பழங்கள், டெஸர்ட் என்று சாப்பிட்ட பின்பு ''எனக்கு இன்று பிறந்த நாள். நீ வராமல் இருந்திருந்தால் எனக்கு ரொம்ப ஏமாற்றமாகியிருந்திருக்கும்'' என்று தணிந்த குரலில் அவன் கூறியதும், அவள் இனம் புரியாத பரபரப்பில் ஆழ்ந்தாள்.

'இந்தப் பேச்சும் நட்பும் எதில் போய் முடியும்?'

# அவனுக்குப் பதில் நானா?

## லட்சுமி ராஜரத்தினம்

வெற்றிப் பெருமிதம் சிறு நகைப்பாக இதழ்களில் ஓடியது. அவள் அவனை முறைத்துப் பார்த்தாள்.

''எனக்கு அது ரொம்பத் தேவை. அதனால் தயவுசெய்து தர முடியுமா?'' இசையின் தணிந்த குரல் பாடலாக மீட்டியது.

''மன்னிக்கவும்; எனக்கும் இது ரொம்பத் தேவை. இதற்காக எத்தனை கடைகளுக்கு ஏறி இறங்கினேன், தெரியுமா? இந்த மாதிரி வேலைப்பாடு செய்த படங்கள் கிடைப்பது கஷ்டம்.'' மீசையைச் செல்லமாக இரு விரல்களால் நீவிக் கொண்டான்.

கடைக்காரன் அழகாக 'பாக்' செய்த பின்பு, ''அம்மா, உங்களுக்கு?'' என்றவாறே அதை அவனிடம் கொடுத்தான். ''எனக்கு ஒன்றும் வேண்டாம்'' என்று முகம் சிவக்கக் கூறிவிட்டு விருட்டென்று போனாள்.

மறு நாள் சென்னை மார்க்கெட்டிலிருக்கும் அவள் கரோல்பாக் பஸ் நிறுத்தத்தில் வந்து காத்துக் கொண்டிருந்தாள். மெல்ல நகர்ந்த

அவள் தோழி மீனுவுக்கு ரஜோரிகார்டனில் கல்யாணம். மாப்பிள்ளையும் தில்லி என்பதால் அங்கேயே திருமணம். வீட்டு வாசலிலேயே ஜரிகைப் பந்தல். டெல்லியில் இது வளர்ந்து வரும் ஒரு பகுதி.

''அவ்வளவு தூரம் போக வேண்டுமா?'' அம்மா தடுத்தாள்.

''அவ்வளவு தூரம் என்று பார்த்தால் முடியுமா? நாளைக்கே நான் மீனுவின் முகத்தில் விழிக்க வேண்டாமா? 'ரஜோரி கார்டன் தூரமாக இருந்தது. அதனால் வரமுடியவில்லை' என்றால் என்னைப் பத்துப் பேரை வைத்துக் கொண்டு 'பாப்பா'ன்னு பழிக்கக் காண்பிப்பாளே என்று கூறி விஜி கல்யாணத்துக்குக் கிளம்பினாள்.

கல்யாணத்தில் பெண்ணுக்குத் தோழியாகப் பூவைச் சரி செய்து, மோவாயை நிமிர்த்தி, இலகத்தை அளவாகத் துடைத்து

ஏதேதோ செய்து மீனாவை அழகு படுத்தினான் விஜயா.

''இன்று மட்டும்தான் பெண்ணின் தோழிக்கு இந்த உரிமை.'' பழகிய குரல். எதிரில் முரளி. மாப்பிள்ளைத் தோழனாக வேஷ்டி, ஜிப்பாவுடன் காட்சியளித்தான்.

''உங்களைப் பார்த்தால்தான் மாப்பிள்ளையாகத் தெரிகிறது. வரப் போகிறேன் என்று என்னிடம் சொல்லவேயில்லையே?'' ஏமாற்றம் கமழக் கேட்டதும், ''உன்னை ஆச்சரியத்தில் ஆழ்த்தக் கிடைக்கும் நல்ல தருணத்தைக் கைவிடுவேனா?'' என்றான்.

''குறும்பைப் பார்!'' அவள் சிரித்து விட்டாள்.

இரவு சாப்பாடு முடிந்த பின்தான் மீனா அவளை அனுப்பச் சம்மதித்தாள்.

இரவு நேரத்தில் தனியாகப் போக முடியாமல் பஸ் நிறுத்தத்துக்கு வந்த பொழுது பைக்குடன் பின்னால் வந்த முரளி பின் சீட்டைக் காட்டினான். ''உட்கார்; அதற்குரிய உரிமை உனக்குத்தானே?''

அவளுடைய வீட்டின் முன்னே இறங்கிய பொழுது உள்ளே வரச் சொல்லி அழைத்தாள்.

''வரவேண்டிய நேரத்துக்கு வருகிறேன். அதுவரை நம் சந்திப்பு வெளியேதான்.''

அவன் போன பின்பே அவள் கதவைத் தட்டி உள்ளே போனாள்.

ஒரு வாரத்துக்கு அலுவலகத்துக்கு அவள் விடுமுறை எடுத்துக் கொண்டிருந்தாள். கலைப் பொருட்காட்சி ஒன்று திறந்தவெளி மைதானத்தில் நடைபெறப் போவதால் அவள் செய்த பொம்மைகளை ஒரு ஸ்டாலில் வைக்க





ஒரு வழக்கில் ஒரு ஹிப்பியைச் சாட்சி சொல்லக் கூப்பிட்டார்கள். 'ஹிப்பி' சொன்னான்: "நான் குளித்துக் கொண்டிருந்தபோது..."

"பொய்ச் சாட்சி சொன்னதற்காக நூறு ரூபாய் அபராதம்" என்றார் நீதிபதி உடனே. —முரளி

நினைத்தாள். அவள் தந்தை அதற்கான உத்தரவைப் பெற்று விட்டார். ராமாயணம் பாரதம், நள — தமயந்தி, சிலப்பதிகாரம், என்ற கதைக் காட்சிகள். அழகான கண்ணாடிப் பெட்டியில் வரிசை வரிசையாக — கதை விளக்கமாக.

முரளியை அழைத்து வந்து தன் கைத் திறனைக் காட்டி முன்கூட்டியே சபாஷ் பெறும் ஆவல் அவள் உள்ளத்தில் கிளர்ந்தது.

நியூ ராஜேந்திர நகரில் உள்ள அவன் வீட்டுக்கு அவள் போனபோது 'அம்போ' என்று திறந்து கிடந்தது. முரளி வந்திருக்கவில்லை. ஹாலில் புத்தகங்களைப் பரத்திப் பொம்மைகளுடன் விளையாடும் மழலை ஒன்று. கொழு கொழுவென்று விளம்பரப் பொம்மை மாதிரி அமர்ந்திருந்தது.

"முரளி!" என்று அவள் அழைத்ததும் அந்தக் குழந்தைதான் நிமிர்ந்து பார்த்தது. மெல்ல அவள் அருகில் வந்தது. "டாடி சாஹிப்? தப்தர் கயா" என்று கூறிக் கையைக் கொட்டிச் சிரித்தது.

குரல் கேட்டு வெளியே வந்தான் பஞ்சாபி வேலைக்காரன். விஜியால் ஓரளவு பஞ்சாபி கலந்த ஹிந்தியைப் புரிந்து கொள்ள முடியும். அதனால் "குழந்தை யார் குழந்தை?" என்று கேட்டாள்.

நிலைப்படியின் மேல் மாட்டியிருந்த முரளியின் புகைப்படத்தைக் காட்டி "அவருடையது" என்று ஜாடை காட்டினான் வேலைக்காரன். நெஞ்சக் குலையை யாரோ தனியாக உலுக்குவது போல் இருந்தது. குழந்தை அவளுடைய அழகுப் பையைத் தடவிப் பார்த்து மகிழ்ந்தது.

"குழந்தையின் அம்மா?" என்று அவள் கேட்டாள்.

"செத்துப் போய்விட்டாள். சாஹபின் அம்மாதான் இருக்கிறாள். அவளும் உத்தர ஸ்வாமி மலைக்குப் போயிருக்கிறாள்!"

'ஒருத்தியிடம் வாழ்ந்து ஓர் அடையாளம் பெற்ற பின்னர் அதைத் தன்னிடம் முரளி ஏன் மறைக்கிறார்?' தான் அவரிடம் வாழ வந்த பின்பும் இதை மறைக்க முடியுமா? இல்லாவிட்டால் கல்யாணம் ஆன பின்பு தெரிந்தால் என்னால் என்ன செய்ய முடியும் என்ற துணிவா? நினைத்தால் உடல் படபடவென்று நடுங்கியது.

கேவலம் அவள் ஆசைப்பட்ட படத்தை விட்டுக் கொடுக்காத பொழுதே அவனுடைய சுயநலத்தைப் புரிந்து கொண்டிருக்க வேண்டும். அவனைப் போய்க் காதலித்தது ஓர் அறிவீனமல்லவா? மனமும், உடலும் சலிக்கத் திரும்பிய அவள் தொப்பென்று படுக்கையில் கலங்கி விழுந்தாள். ராச லீலா படத்தைத் தன் தோழியிடமிருந்து வாங்கி வரப்போவதாகத்தான் அம்மாவிடம் கூறியிருந்தாள். அது கிடைக்காத ஏமாற்றமாக இருக்கும் என்று அம்மா நினைத்தாள். 'ராச லீலா படத்துக்காக அழவில்லை. வாழ்க்கையையே லீலையாக நினைப்பவனின் துரோகத்தை நினைத்து அழுகிறேன்' — இதை அம்மாவிடம் சொல்ல முடியவில்லை.

தொடர்ந்து விடுமுறையை நீடிப்புச் செய்து விட்டாள். அன்று சம்பளம் வாங்க மட்டும் அலுவலகம் போக வேண்டியிருந்தது. அதனால் பஸ் ஸ்டாண்டில் நின்றுகொண்டிருந்தாள். தூரத்தில் வரும் முரளி அவளைக் கண்டதும் கண்கள் பளபளக்கக் கையை உயர்த்திக் காட்டினான். காலியாக நின்ற ஸ்கூட்டரில் பறந்துவிட்டாள் விஜயா.

முரளி திகைத்து நின்றான்.

அலுவலகத்தில் அவள் நுழைந்த வேகத்தில் மீனாவிடம், "யார் என்னைத் தேடி வந்தாலும், போன் வந்தாலும் நான் இல்லை என்று கூறி விடு. நான் சம்பளம் வாங்கும் வரையில் ஓய்வு அறையில் இருக்கிறேன்" என்று கூறினாள் விஜயா.

சம்பளத்தைப் பெற்றுக் கொண்டு அவள் திரும்பிய பொழுது முரளி வந்ததை மீனா அவளிடம் கூறினாள். "உனக்கும் முரளிக்கும் என்ன வந்தது?"

"பிறகு சொல்கிறேன்" என்று கூறிவிட்டு வீடு வந்து சேர்ந்தாள்.

சென்னையில் உள்ள பணக்கார அத்தை கடிதம் எழுதியிருந்தாள். கடிதத்தைப் படித்த அம்மா மகிழ்ச்சியில் துள்ளினாள். அத்தை பிள்ளை ரவி லண்டனிலிருந்து இன்னும் இரண்டு நாளில் இங்கே நேராக வரப் போகிறான். அது மட்டும் முக்கியம் இல்லை. ரவி இந்த விடுமுறையில் விஜயாவைக் கல்யாணம் செய்து கொண்டு லண்டனுக்கு அவளை அழைத்துச் செல்லப் போகிறான்.

பதினைந்தே நாளில் ஒரே ஒரு முகூர்த்தம் பாக்கி இருக்கிறது. அதிலேயே திருமணத்தை நடத்தி விட வேண்டும் என்று அத்தை எழுதி விட்டாள். அவள் சொல்லை அப்பா தட்ட மாட்டார். அதனால் ரவியுடனேயே எல்லோரும் சென்னைக்குப் போக முடிவாயிற்று. என்ன இருந்தாலும் விஜியையும் ஒரு வார்த்தை கேட்பதுதான் நியாயம் என்று உணர்ந்த அம்மா "விஜி, அத்தையின் கடிதத்தைப் பார்த்திருப்பாய். ரவியை மணக்க உனக்கு விருப்பம்தானே?" என்றாள்.

முரளியிடம் நான் ஏமாறக் கூடாது.. ரவியை மணப்பதுதான் முரளியைப் பழி வாங்கச் சரியான சந்தர்ப்பம்.

"நீயும் அப்பாவும் எனக்குக் கெடுதலா செய்யப் போகிறீர்கள்?"

திருமணம் முடிந்து விட்டது. ரவியின் ஆண்மை அவளை வளைத்துக் கொண்டது. மெல்லிய சீண்டல்கள், பேச்சில் தோந்த

வைக்க வேண்டும் என்று பேசி வளைக்கும் இடுக்கிப் பேச்சுக்கள், வார்த்தைக்கு வார்த்தை அவள் தனக்குத் தேவை என்று உணர்த்தும் சிருங்கார ரஸ நயங்கள் எல்லாமே முரளியை மறக்க வைக்க உதவின.

அவள் அனுப்பிய பத்திரிகை அவனுக்குக் கிடைத்திருக்கும். என்ன நினைப்பான் அதைப் பற்றி? உறவினர்கள் வீட்டு விருந்துகள் முடிந்து விட்டன. லண்டனுக்குச் செல்லும் நாட்கள் நெருங்கிக் கொண்டிருந்தன. விஜியின் பெற்றோர் அவர்களை ஒரு வாரம் தில்லியில் வைத்துக் கொள்ள விரும்பினர். ரவி, ''விஜி, நீ வேலையை 'ரிஸைன்' பண்ணி விடு'' என்றான்.

அவள் அலுவலகத்தில் நிற்கும் பணத்தைப் பெறவும், தன் தோழிகளிடம் விடை பெறவும் பத்து தினங்கள் முன்பாகவே தில்லிக்கு வந்தாள்.

''ரவி, இது லண்டனில் கிடைக்குமா? விஜிக்கு இன்னும் கொஞ்சம் புடவைகள் வாங்கித் தரட்டுமா? என்ன ஊறுகாய் போட்டுத் தரட்டும்?'' என்ற அம்மா தயாரிப்பில் முனைந்தாள்.

லண்டனுக்குக் கிளம்பும் முதல் நாள் மாலை அம்மா சமையலறையில் இருந்தாள். நெய், தேங்காய் எண்ணெய், சர்க்கரை மணம் கமழ்ந்தது. ரவியும் அப்பாவும் வெளியே போயிருந்தார்கள். அழைப்பு மணியின் மெல்லிய ஒலி கேட்டு விஜி கதவைத் திறந்தாள். ஒரு பரிசுப் பெட்டியுடன் முரளி நின்று கொண்டிருந்தான். கண்கள் உட்குழிந்து, கன்னத்துச் செழுமை வற்ற, ரோம முட்கள் சிலும்ப 'இவன் முரளிதானா?' என்ற சந்தேகத்தைக் கிளப்பியது.

''நீங்களா?'' அதிர்ந்து விட்டாள்.

''உன் கல்யாண அழைப்பிதழைப் பார்த்து இன்னும் உயிரை விடவில்லை. நீ லண்டனுக்குப் போய் விடுவதாக மீனா சொன்னாள்.''

''உள்ளே வந்து உட்காரலாமே?''

அவன் அந்த அழைப்பை ஏற்றுக் கொண்டான்.

''கையில் ஒரு பிள்ளையுடன் காதலிக்கவந்த உங்களைப் பார்த்து உயிரை விட வேண்டியவள் நானல்லவா?''

அவன் புருவம் நெருங்கிப் பிரிந்தது. யாரோ வந்திருப்பதை உணர்ந்த அம்மா தன் வேலை நடுவே காப்பியைக் கொடுத்து விட்டுப் போனாள்.

''நான் ஒரு கணவனுக்கு ஒரு மனைவியாக ஒரே மனைவியாக இருக்க விரும்பினேன். நாட் ஆல் ஏ சப்டிட்டியூட். வேறு ஒரு பெண்ணுடன் வாழ்ந்த வாழ்வை மறைத்தே விட்டீர்களே?''

அவன் பெருமூச்சு இழுத்து விட்டான். ''உண்மைக்குச் சில சமயங்களில் ஓடி ஒளிய அதிக அவசரம் ஏற்பட்டு விடும் போல் இருக்கிறது'' என்று இகழ்ச்சியாகச் சிரித்தான்.

''டாடி. தப்தர் கயா என்று சொன்ன உங்கள் மகன் உண்மை இல்லையா? உங்கள் குழந்தை என்று படத்தைக் காட்டும் வேலைக்காரன் சொன்னது உண்மை இல்லையா? எந்த உண்மைக்கு அதிக அவசரம் முரளி? எனக்குப் புரியவில்லையே?''

''நீ சொன்னது எதுவுமே உண்மையில்லை. எனக்குப் பேசச் சந்தர்ப்பம் கொடு, விஜி?''

கண் கொட்டாமல் அவனையே பார்த்தாள் விஜி. ''சொல்லுங்கள்.''

''ஒரு வருடத்திற்கு முன்னால் லக்னோ — கான்பூர் போகும் சாலை. என் ஸ்கூட்டரை ஓவர்டேக் செய்யும் மற்ற ஸ்கூட்டர். ஒரு கணவன், மனைவி, சிறு குழந்தை. போகும் பொழுது டாட்டா காண்பித்துச் செல்லும் அந்தக் குழந்தை. பிறகு மெல்லப் போகும் ஸ்கூட்டர். நான் அதைக் கடந்ததும் என்னை முந்தும். பாதை ஓரத்தில் சரளைக் கற்களின் குவியல். இருட்டும் சமயம் வேகமாகப் போன பொழுது சரளைக் கற்கள் தடுத்து எதிரில் வந்த லாரியில் மோதி அந்த இடத்திலேயே கணவனும், மனைவியும் இறந்து போனார்கள். பயங்கர விபத்து அந்த அந்தி மாலையில்.

''பின்னால் போன எனக்கு எத்தகைய அதிர்ச்சி. குழந்தை தூக்கி எறியப்பட்டு ஓரத்தில் உள்ள சாக்கடையில் கிடந்தது. யாரும் குழந்தையைக் கவனிக்கவில்லை. நான் தான் 'இந்த ஸ்கூட்டரில் குழந்தை ஒன்றும் வந்தது' என்று கூறிக் குழந்தையைத் தேடி எடுத்தேன். நேர்ந்த விபத்து குழந்தைக்குப் பயத்தைக் கொடுத்தது. என் ஸ்பரிசத்தை அது தனது தந்தையுடையதாக நினைத்துக் கொண்டு விட்டது. அதன் பயம் இன்னும் தெளியவே இல்லை. அழ ஆரம்பித்தால் நிறுத்தவே முடியாது.

''என்னை டாடி என்றே அழைக்கிறது. எத்தனை தடவை சொன்னாலும் 'அங்கிள்' என்று அழைக்க மறுக்கிறது. இப்பொழுதும் டாக்டரின் பரிசோதனையில் தான் இருக்கிறான். கொஞ்ச காலம் கழித்து ஏதாவது விடுதியில் சேர்க்க நினைத்திருக்கிறேன். பச்சைக் குழந்தையை அனாதை போல விட எனக்கு மனமில்லை.''

விஜயா பேயறைந்தவள் போல உட்கார்ந்துவிட்டாள். உண்மை எப்படிப்பட்டது?

அவன் எழுந்து விட்டான். ''இந்தா, இது என் பரிசு. இது நீ ஆசைப்பட்ட — நம் சந்திப்பு நிகழக் காரணமான படம். இதை என்னுடையவளாக நீ என் வீட்டில் மாட்ட வேண்டும் என்று ஆசைப்பட்டேன். அதனாலேயே என் நண்பருக்கு இதைப் பரிசாகத் தரவில்லை. உனக்காக இதைத் தரும் சந்தர்ப்பம் வந்து விட்டது. என் நண்பருக்கு வாங்கியது உனக்குச் சொந்தமானது போல், எனக்குச் சொந்தமாக வேண்டிய நீ....''

முடிக்காத வாக்கியத்தை அவளை முடித்துக் கொள்ள விட்டு விட்டு முரளி புறப்பட்டு விட்டான். அவள் பார்வையை நீர்த் திரை மறைத்தது.

---

**அறியாமைகளில் எல்லாம் பெரியதோர் அறியாமை ஒன்று உண்டு. அது என்ன தெரியுமா? தெரியாத ஒன்றை தனக்குத் தெரிந்ததாகக் கற்பனை செய்து கொள்கின்றானே அதுதான். அதுவே தவறுதல் அனைத்திற்கும் மூல காரணமாய் இருக்கிறது.**

— பிளேட்டோ





"காலச் சக்கரம் வேகமாகச் சுழல்கிறது. கட்டை வண்டி போய்க்களவேக ஜெட் விமானம் வந்துவிட்டது. தென் கோடியிலிருந்து வட கோடிக்குத் தபால் ஒரே நாளில் போய்விடுகிறது. டில்லியில் இருப்பவரோடு நினைத்த நேரத்தில் பேசிவிட முடிகிறது. உலகம் எப்படி யெல்லாம் முன்னேறி விட்டது!"

"நீங்கள் தான் மெச்சிக் கொள்ள வேண்டும். அந்தக் காலத்திலிருந்து இந்தக் காலம் வரை பெண்கள் டிரஸ் செய்து கொள்ள எடுத்துக் கொள்ளும் நேரம் மாறவே இல்லை. அம்மாளை ஆறு மணி விருந்துக்குப் போகவேண்டும் என்று கூறினீர்களே! அவள் அலங்காரம் செய்து கொள்ளப் போய் மூன்று மணியாகிறது. இன்னும் வர வில்லை!" என்றான் ஆறுவது மகன். அப்பொழுது மணி ஆறே முக்கால். —அக்ஷயம்

# இன்று போல் என்றும் வாழ்க

பலர் முன்னிலையில் முறைப்பெண் கங்கா முருகனை ஆங்கிலம் படிக்காதவன் என்று அவமதித்துப் பேசப் போக, அவளைவிட அதிகம் படித்த பெண்ணை மணந்து கொண்டு கிராமத்துக்குத் திரும்புவதாகச் சபதம் செய்து விட்டு முருகன் சென்னைக்கு ரயிலேறுகிறான். அவன் அதிகம் படித்த பெண்ணைச் சந்திக்கும் முன் பல சுவையான சம்பவங்கள் உருவாகித் திரைக்கதையை வளர்த்து விடுகின்றன.

பட்டிக்காட்டு முருகன் கடைசிவரையில் பட்டிக்காட்டு மனிதனாகவே இருப்பது ஒரு 'சர்ப்ரைஸ்!' சாதாரணமாக, நம் தமிழ்ப் படங்களில், பட்டிக் காட்டுக் கதாநாயகன் 'இடைவேளை'க்குப் பிறகு 'டிப்டாப்'பாக மாறி விடுவான். பட்டிக் காட்டு உடையைக்கூட (கனவு, சண்டைக் காட்சிகளைத் தவிர) எம்ஜியார் மாற்றிக் கொள்ளவில்லை. கண்ணைக் கவரும் 'குளு குளு' வண்ணத்தில் வரும் காதல் காட்சிகளோடு சண்டைக் காட்சிகளுக்கும் குறைவில்லை.

முருகன் சென்னைக்கு வந்ததும் 'ஆல் இன் ஆல்' அருணாசலத்தை ஹோட்டல் சோராவில் சந்தித்த போதே படத்தில் சுவை கூடி விடுகிறது. படித்த, நவநாகரிகப் பெண் மேனகா, "ஒரு பெண்ணுக்குத் தேவை நல்ல வாழ்க்கை. அதை அமைத்துத் தருகிறவன் காலேஜில் படித்திருக்க வேண்டியதில்லை. அவனுக்கு அரிச்சுவடி தெரிந்திருந்தால் போதும்!" என்று நினைக்கிறவளாக அமைந்துவிடவே.....இங்கிலீஷ் படிக்காத பட்டிக்காட்டு முருகனோடு காதல் தொடங்கிக் களை கட்டுகிறது.

ராதா சலூஜா இளமை கொழிக்கத் துருதுருவென்றிருக்கிறார்; மேனகா என்ற பெயருக்கேற்ப நிறைய நடனம் ஆடியிருக்கிறார்; நடிப்பிலும் கவனம் செலுத்தியிருக்கிறார்; இரவல் குரல்தான் என்றாலும் இடைஞ்சலாயில்லை; இயல்பாகவே இருக்கிறது.

கங்காவைக் காதலித்துக் கைவிடும் காதலனாக வரும் விஜயகுமார், நீ விபத்துக்குப் பிறகு திருந்தி விடும் வில்லன். நன்றாய் நடித்திருக்கிறார். திடீரென்று மேனகாவின் அண்ணனாக மாறித் திகைக்கவும் வைத்திருக்கிறார்!

மிகவும் நல்ல மனிதராக வரும் நம்பியார் தம் நல்ல நடிப்பினால் நினைவில் நிற்கிறார்.

வண்ணக் கலவையான இப் படத்தின் ஒளிப்பதிவு சிறப்பு அம்சம். கே. சங்கரின் டைரக்ஷன் திறமைக்கு இப் படம் ஒரு சவாலாக அமைந்திருக்கிறது. பாடல்கள் இனிமையாக இருக்கின்றன.

படத்தின் தலைப்புக்குப் பொருத்தம் தேடுகிறீர்களா? படம் என்று ஒன்று எடுத்தால் அதற்குப் பெயர் என்று ஒன்று வேண்டுமே என்ற உண்மையை உணர்ந்தால் பொருத்தம் தேட மாட்டீர்கள்!

காந்தன்

அறவோரும் பத்தினியரும் தங்களைத் தீண்டாமல் விட்ட அக்னித் தேவனைத் துதித்துப் போற்றி வணங்கினராம்.

''வருவிருந்து ஓம்பி மனையறம் முட்டாப்
பெருமனைக் கிழத்தியர் பெருமகிழ்வு எய்தி;
'இலங்குபூண் மார்பிற் கணவனை இழந்து,
சிலம்பின் வென்ற சேயிழை நங்கை
கொங்கைப் பூசல் கொடிதோ அன்று'என
பொங்கெரி வானவன் தொழுதனர்
ஏத்தினர்.''

கண்ணகி மதுரையைத் தீக்கு இரையாக்கியது மாலை நேரத்தில். அன்று வெள்ளிக்கிழமையுங்கூட. அதனால், கோயில்களிலே மாலை நேர விழா ஒலியும், வேதங்களின் ஒலியும், அந்தணர்கள் நடத்தும் யாகசாலைகளிலிருந்து எழக்கூடிய மந்திர ஒலியும், தெய்வங்களைப் பிரார்த்திப்போர் எழுப்புகின்ற பாட்டொலியும், மாலை நேரத்தில் அரண்மனையிலே முழங்கும் முரசொலியும் அன்று ஒலிக்கவில்லை. வீடுதோறும் இளம் பெண்கள், மாலை நேரத்தில் விளக்கேற்றும் காட்சியை அன்று காண முடியவில்லை. இன்னும் மாலைநேரத்தில் நிகழ்கின்ற களியாட்டங்களை யெல்லாம் இழந்து நின்றது மதுரை நகரம்.

''அந்தி விழவும் ஆரண ஓதையும்,
செந்தீ வேட்டலும், தெய்வம்
பரவலும்,
மனைவிளக் குறுத்தலும் மாலை
அயர்தலும்
வழங்குகுரன் முரசமும் மடிந்த
மாநகர்.''




கண்ணகி மதுரையை எரித்தபோது அரசு என்ன செய்தது? அவளைத் தடுத்து நிறுத்தி மதுரையைத் தீ விபத்திலிருந்து காப்பாற்றாத காரணம் என்ன? விடை தருகின்றார் இளங்கோவடிகள்.

கண்ணகி நெடுஞ்செழியனுடைய அவையில் போய் நின்ற போது, அமைச்சர்கள் அவையிலிருந்தனர். இன்னும் அரசனுடைய உயர் அலுவலர்களும் அவையில்தான் இருந்தனர். ஆனால், அவர்கள், அரசனும் அவனைப் பின்பற்றி அரசியும் உயிர் விட்டதை அறியாதவர்களாகி, பேசாப் பதுமைகள் போல் இருந்தனராம். மெய்யிற் பொடியும் விரித்த கருங்குழலும் கையிற் தனிச் சிலம்புமாக வந்த கண்ணகியைக் கண்டவுடனே ''கூடலான் கூடாயினன்'' என்கிறார் இளங்கோ. அதுபோல, பாண்டிவேந்தனுடைய அரசியல் சுற்றத்தாரும் அவைக்கு வந்த கண்ணகியைக் கண்ட அளவிலேயே அச்சத்தால் செயலற்று, உயிரற்ற சித்திரம் போலாகி விட்டனர்.

''அரைசர்ப் பெருமான்
அடுபோர்ச் செழியன்
வளைகோல் இழுக்கத்து
உயிராணி கொடுத்தாங்கு
இருநில மடந்தைக்குச்
செங்கோல் காட்டப்
புரைதீர் கற்பின்
தேவி தன்னுடன்
அரைசு கட்டிலில்
துஞ்சியது அறியாது;
ஆசான், பெருங்கணி,
அறக்களத்து அந்தணர்,
காவிதி மந்திரக்
கணக்கர் தம்மொடு
கோயின் மாக்களும்
குறுந்தொடி மகளிரும்
ஓவியச் சுற்றத்து
உரையவிந் திருப்ப''

அரண்மனைக்குள்ளே அரசவையில் இருந்தவர்கள் நிலை இதுவாக, அரண்மனைக்கு வெளியேயிருந்த குதிரைப் படையினர், தேர்ப் படையினர், காலாட் படையினர் ஆகிய ராணுவத்தோரெல்லாம் அரண்மனைக்குள்ளே நடந்ததனை அறியாது, அரண்மனை தீப்பற்றி எரிவதை மட்டும் பார்த்துத் திகைத்தனர். அந்தத் தீயை அணைப்பதற்கு முழு மூச்சுடன் முயன்றனர்.

அரண்மனைக்கு வெளியே இருந்த படைவீரர்களின் நிலையை இளங்கோவடிகளே வருணிக்கக் கேட்போம்:

''காழோர், வாதுவர், கடுந்தேர் ஊருநர்,
வாய்வாள் மறவர் மயங்கினர் மலிந்து,
கோமகன் கோயில் கொற்ற வாயில்
தீ முகம் கண்டு தாம் மிடைகொள்ள''

அரசனும் அரசியாரும் உயிர் துறந்த நேரத்திலே, இளவரசனான வெற்றி வேற் செழியன் மதுரைக்கு நெடுந் தொலைவிலுள்ள துறைமுக நகரமான கொற்கையிலே இருந்தான். அரண்மனைக்குள்ளே இருந்த மன்னனுடைய அரசியல் சுற்றத்தார் செயலற்று விட்டனர். அரண்மனைக்கு வெளியேயிருந்த படைவீரர்கள் உள்ளே நடந்ததனை அறியாதவர்களாகி, திகைத்தனர். இந்த நிலையில் தான் கண்ணகியின் அராஜகப் புரட்சி நிகழ்ந்தது. சுருங்கச் சொன்னால், மதுரையிலே ''அரசு'' என்பதாக ஒன்று இயங்காத நேரத்திலே — தன்னைத் தடுப்பாரற்ற நிலையிலே கண்ணகி மதுரையைக் கொளுத்தினாள். இது இளங்கோ தரும் அரசியல் சித்திரம்.

மதுரை எரிந்து கொண்டிருந்த நேரத்தில் கண்ணகி என்ன செய்து கொண்டிருந்தாள்?

(தொடரும்)

(மயிலை இலக்கிய வட்டத்தில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து)

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam. Associate Editor: K. Rajendran.

கண்டுகொள்ளுங்கள் அத்தாட்சி.

# மின்னலடிக்கும், ஸூப்பர் ரின் வெண்மை..
# இதர டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சும் வெண்மை







'ஒப்பிட்டுப் பார்க்கும்' சலவைப் பரிட்சை இதோ.

* ஒரே அளவுக்கு அழுக்கான இரண்டு துணிகளை எடுத்துக் கொள்ளுங்கள்.
* ஒன்றை எந்த டிட்டர்ஜெண்ட் வில்லை அல்லது பார் கொண்டு சலவை செய்யுங்கள்.
* இனி, மற்றொரு அழுக்குத் துணியை ஸூப்பர் ரின் கொண்டு வெளுத்திடுங்கள்.
* ஒப்பிட்டுப் பாருங்கள் பலன்களை.

கண்ணாரக் காண்பீர்கள்:
ஸூப்பர் ரின் மூலம் துணிகளுக்கு எவ்வளவு அதிக வெண்மை வந்தடைகிறது பாருங்களேன். வேறெந்த டிட்டர்ஜெண்ட் வில்லையோ, பாரோ தருவதை விட அதிக வெண்மை...காரணம், வேறெதனையும் விட அதிக வெண்மையூட்டும் சாதனம் அடங்கியது ஸூப்பர் ரின்.




## இதர டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் விட அதிக வெளுப்பூட்டும் சக்தி.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

லின்டாஸ் RIN 23-203 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேயா காசு